5-6

# திரு அண்ணாமலைத் தீப விழா

திருவண்ணாமலை

ஈசான்யமடம்

தவத்திரு இராமனாத அடிகளுக்கு

பி. ஸ்ரீயின்

அன்புக் காணிக்கை

சாதாரண வருடம்

கார்த்திகைத் தீப விழா

5-6 1441

# அண்ணுமலைத் தீப விழா

2396

பி. ஸ்ரீ.




ஸ்ரீ தங்கம் பதிப்பகம்
25, டாக்டர் நடேசன் சாலை
சென்னை-5.

1970 — 1.00

முதற் பதிப்பு—1970

விலை ரூ. 1-00

பொருள்



அச்சிட்டோர்:
ஷண்முகம் பிரஸ்,
பிரைவேட் லிட்.,
சென்னை-1.

# 1. கார்த்திகைத் தீபத்தின் கதை

கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று சந்திரன் கிருத்திகை நட்சத்திரத்திலிருக்கும்போது கொண்டாடப் படுகிறது. கார்த்திகை தீப விழா. நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் என்பவை ஐம்பெரும் பூதங்கள் (பஞ்ச பூதங்கள்) என கூறப்படுகின்றன அல்லவா? இவற்றுள் நெருப்பை வழிபடுவது இவ்விரதத்தின் தனிப் பெரு நோக்கம்.

எல்லாம் இறையுருவம். நெருப்பைச் சிறப்பாகச் சிவனுரு என்பர். அழலாடும் பெருமான் சிவபெருமான்; செந்தீ வண்ணன்.

அழலாட அங்கை சிவந்ததோ? அங்கை
அழகால் அழல்சிவந்த வாறோ?

என்ற திருவாக்கைச் சிவநேசர்கள் நினைவு படுத்திக் கொள்ளலாம்.

கார்த்திகைத் தீப விழா பண்டைக்காலந் தொட்டு நம் நாட்டில் நிகழ்ந்து வந்திருப்பதாக ஊகிக்கலாம். நச்சினார்கினியர் என்ற உரையாசிரியர் தமது தொல்காப்பிய உரையில் (தொல் காப்பியம் என்ற மிகவும் பழமையான தமிழ் இலக்கிய உரையில்) கார்த்திகைத் தீபத்தைக் குறிப்பிடுகிறார். இவ்வுரையாசிரியரை உச்சி மேல் புலவர் கொள் நச்சினார்கினியர் எனப் புகழ்ந்து

பேசுகிறுர்கள். அத்தகையத் தமிழ்ப் பெரும் புலமைத் திறன் வாய்ந்தவர் இவர், 'கார்த்திகைத் திங்களில்' (கார்த்திகை மாதத்தில்) கார்த்திகை நாளில் (நட்சத் திரத்தில்) ஏற்றிய விளக்கு' என்பது இவர் வாக்கு.

'கார் நாற்பது' என்ற நூலிலும் கார்த்திகை விளக் கின் பெருமை கூறப்பட்டுள்ளது. திருஞான சம்பந்தர் அருளிய தேவாரத்தில் கார்த்திகை விளக்கை 'தைய லார்' கொண்டாடும் விளக்கீடு என்று குறிக்கப்பெறு கின்றது. கார்த்திகைத் தீப விழா கொண்டாடுவதில் தமிழ்ப் பெண்களுக்கு ஒரு தனி மகிழ்ச்சி; விளக்கீடு காணுமல் போய் விட்டாயோ பூம்பாவாய்? என்று பொருள்படத் திருஞான சம்பந்தர் தம் பூம்பாவைப் பதிகத்தில் பாடியிருப்பது சிவ பக்தர்களின் நினைவுக்கு வரும்.

தமிழர்களுக்கிடையே வழங்கும் பழமொழிகளிலும் சொற்றுெடர்களிலும் கார்த்திகைத் தீபம் புகுந்து ஒளி செய்வதைக் காணலாம். 'குன்றிலிட்ட தீபம் போல்' என்றும் 'மலைமேல் இட்ட ஒளி விளக்குப் போல்' என்று நம் மக்கள் சாதாரணமாகப் பேசிக் கொள்ளு கிறுர்கள்.

திருவண்ணுமலைக் குன்றில் ஏற்றிவைக்கும் மகா தீப தரிசனத்தின் நினைவை அடிப்படையாகக் கொண்டு தான் இத்தகைய சொற்றுெடர்கள் தோன்றியுள்ளன என்று துணிவது பொருத்தமே. இது வெளிப்படையான விஷயம் என்ற பொருளை 'இது மலை விளக்கு' எனக் கூறிப் புலப்படுத்துவதும், வடவேங்கடம் முதல் தென் குமரி வரை உள்ள தமிழகத்தின் வழக்கமாகும். ஏன்? தமிழர்கள், உலகத்தின் எப்பகுதியில் காணப்பட்டா

லும், எங்கே குடியேறி இருந்தாலும்—மலாயா, பிஜித்தீவு, தென் ஆப்பிரிக்காவாக இருந்தாலும் — தங்களுடன் தங்கள் மலை விளக்கையும் கொண்டு போயிருக்கிறார்கள்.

இந்த மலை விளக்கே திருவண்ணாமலைக் கார்த்திகைத் தீபப் பெரு விழா.

இத் திருவண்ணாமலையின் பெருமைதான் கொஞ்சமோ!

உண்ணாமுலை உமையாளொடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை

என்று திருவண்ணாமலையைச் சிறப்பித்துப் பாடுகிறார் ஞானசம்பந்தப் பெருந்தகை. இத்திருப் பாட்டிலே அண்ணாமலையின் அருவித் திரளையும் குறிப்பிடுகிறார். இத்தகைய அண்ணாமலையை தொழுவோரின் தீவினை அற்றுப்போகும் என்று கூடச் சம்பந்தர் சொல்லவில்லை; நல்வினை தீவினை என்ற இருவகை வினைகளின் பாசமும் அற்றுப்போகும் என்கிறார். தீவினை இரும்பு விலங்கு என்றால் நல்வினை பொன் விலங்கு என்பது நம் தத்துவக் கொள்கை. இந்த இரண்டின் பந்த பாசங்களிலிருந்தும் விலகி நின்று தொண்டாற்றுகிறானும் உண்மைத் தொண்டன்.

அண்ணாமலையானைத் தொழுது தீபதரிசனம் செய்வதில் தமிழர்களுக்கு விசேஷ மனநிறைவு ஏற்படுகிறது. இத்தகைய பிரதேசத்தில் கொண்டாடப்படும் தீப விழா சிவ நேசர்களின் மனோபாவத்தில் 'அடிமுடி காணாத' அற்புதக் கதை ஒன்றுடன் இசைந்து காணப்படுகிறது.

## தீப விழாவின் கதை

திருமாலுக்கும் பிரமனுக்குமிடையே 'யார் பெரியவர்? என்ற ஒரு விவாதம் ஏற்பட்டதாம். 'நான் தான் பெரியவன் என்று தோள் கொட்டினாராம் நாராயண மூர்த்தி; இல்லை; இல்லை; பெரியவன் நான் தான்; நான், நான், நான்! என்று மார்தட்டினான் படைப்புக் கடவுளான பிரமன்.

இந்த வாதப் போராட்டத்தில் யாராவது தீர்ப்புச் சொல்ல வேண்டுமே, அதற்காகச் சிவபெருமானை வேண்டிக் கொண்டார்கள் ஆக்கலுக்கும் அளித்தலுக்கும் முறையே உரியவர்களான பிரம்மனும் திருமாலும். உடனே சிவபெருமான் ஓங்கி நின்றார். ஒரே அனற்பிழம்பாக. பரஞ்சோதி அல்லவா? ஒரே தீ மலையாகி நின்றார். திகைத்துப் போயினர் அணுகி நிற்கத் துணிந்த இருவரும்.

எழுந்தது ஓர் அசரீரிவாக்கு, 'இந்தச் ஜோதி மலையில் முடியோ அடியோ உங்களில் எவர் முதலில் காணப் போகிறாரோ?' என்பதாக. உடனே அடிமுடி தேடப்புறப்பட்டனர் இருவரும். பிரமன் விண்ணை நோக்கிப் பறந்தான் அன்னத்தின் உருவம் கொண்டு. திருமால் வராக வடிவம் கொண்டு அடி காணப்புறப் பட்டார். மேலே மேலே, இன்னும் மேலே, பறந்து திரிந்தது அன்னம், 'முடிகாண்போம்' என்ற செருக் குடன். வராகமோ, கீழே கீழே, இன்னும் கீழே, நுழைந்து சென்றது வராகம். ஆனால் அடியும் கண்டாரில்லை; முடியும் கண்டாரில்லை. அணுக முடியாத அதாவது அண்ண முடியாத — மலையாக சிவ ஜோதி வளர்ந்த வண்ணம் திகழ்ந்தது. (அண்ணுதல் —

அணுகுதல்) எனவே அண்ணுமலை என்று பெயர் வந்தது.

தீ மலையாகச் சிவபெருமான் ஓங்கி நின்றது கார்த்திகைத் திங்களில், கார்த்திகை நாளில், மாலை வேளையில். இந்த நம்பிக்கையுடன் ஆண்டு தோறும் திருவண்ணுமலையில் கார்த்திகைத் தீப விழா மிகவும் சிறப்பாய்க் கொண்டாடப்படுகிறது. வேறு சிவன் கோயில்களும் இச்சிறப்பு விழாவைக் கொண்டாடு கின்றன. நாளடைவில் இத்தீப விழாக் கொண்டாட்டம் பெருமாளின் தொண்டர்களையும் வசீகரித்தது. ஆகவே பெருமாள் கோயில்களும் இக்கொண்டாட்டத்தில் ஈடு படலாயின.

'ஆதியும் அந்தமும் (அடியும் முடியும்) இல்லா அரும்பெருஞ்சோதி' என்று திருவெம்பாவை தொடங்கு வதை அறியாதார் யார்? திருவெம்பாவை பிறந்தது திருவண்ணுமலையில் தான். இந்தச் சோதியைத்தான் பரஞ்சோதி என்கிறது திருவெம்பாவையின் இரண்டா வது பாட்டு. ஐந்தாம் பாட்டு.

மால் அறியா, நான் முகனும்
காணு மலை

என்று வருணிக்கிறது.

இறைவன் ஒளிவடிவமாகத் திகழுகின்ருன் என்னும் கொள்கை, எல்லாச் சமயத்தாரும் ஏற்றுக் கொள்ளத் தக்க சிறந்ததொரு பேருண்மையேயாகும். ஒளியை விரும்பாதார் உலகத்தில் உளரோ? ஆதலின் 'கார்த் திகை விளக்கீட்டு விழா' யாவருமே கொண்டாடி, இறைவனை வழிபட்டு உய்யத்தகுந்ததொரு சிறந்த விழா வாகும்.

## கதையில் விஞ்ஞானமும் மனோதத்துவமும்

நில நூலில் நாலு வகை மலைகள் சொல்லப்படுகின்றன. அவற்றுள் நெருப்பினால் உருவாகிய பாறைக் குன்றும் குறிப்பிடப்படுகிறது. இவ்வகைக் குன்றை 'இக்னீயஸ் ராக்' என்று நிலநூல் அறிஞர் கூறுவர். திருவண்ணாமலையைச் சிவனுக்குரிய பஞ்சபூதத்தலங்களில் அக்னித்தலம் என்கிறார்கள்.

திருஞானசம்பந்தரைப்போல், மாணிக்கவாசகரைப் போல், திருநாவுக்கரசர் என்ற அப்பர் சுவாமிகளும் அண்ணாமலையைப் பாடியிருக்கிறார். இத் தலத்திலேதான் திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் வாழ்ந்து பேரும் புகழும் பெற்றிருக்கிறார். குகை நமச்சிவாயர், ஈசான்ய தேசிகர் முதலான பக்த மணிகளுக்கும் இத்தலத்துடன் வாழ்வுத் தொடர்பு உண்டு. அரச குலத் தொண்டர்களான வல்லாள மகாராசன், பிரபுடதேவ மகாராஜன் முதலானவர்களும் அண்ணாமலையுடன் தொடர்பு கொண்டு பேறு பெற்றிருக்கிறார்கள். அண்மையில் சேஷாத்திரி சுவாமிகள், ரமண மகரிஷி முதலானோர்களும் இத்தலத்தில் ஞானதீபங்களாக சுடர் விட்டது நாடறிந்த செய்தி. ஏன் ரமணமாமுனியின் வாழ்க்கையும் வாக்கும் உலகறிந்த செய்திதானே!

இந்தப் பழம் பெரும்பதியின் சிறப்பைத் தேவாரம் திருவாசகம். பதினோராம் திருமுறை, திருப்புகழ் பெரிய புராணம், கந்த புராணம், அருணாசல புராணம் முதலிய பல நூல்கள் குறிப்பிடுகின்றன. இதன் பழம் பெரும் புகழைத் தமிழும் பேசும், வடமொழியும் பேசும், சூத சங்கிதை, சிவ மகா புராணம் முதலான நூல்கள் வாயிலாக. மேலும் தமிழிலே எத்தனை அந்தாதிகள் சதகங்கள், பதிகங்கள். மாலைகள், தனிப் பாடல்கள். அண்ணாமலையின் அருமை பெருமைகளையும் கார்த்தி

கைத் தீபத்தின் பெருஞ் சிறப்பையும் பேசுகின்றன! எத்தனை கதைகள், எத்தனை செவிவழிச் செய்திகள் சிறப்பிக்கின்றன அண்ணுமலை தீப விழாவையும் இதன் மனோதத்துவ உட் பொருளையும்.

இவ் வுட் பொருளை உணர்ந்து அண்ணுமலையைத் தொழுவோருக்குத்தான் என்ன அக மகிழ்ச்சி! என்ன மன அமைதி.

ஆடிப்பாடி அண்ணுமலை
கை தொழு, ஓடிப்போம் நமது உள்ள
வினைகளே!

என்ற பக்த மனோபாவத்தை மனோதத்துவ அறிஞர் புரிந்து கொள்ள முடியும்.

அல்லல் தீர்க்கும்
அண்ணுமலை கைதொழ,
நல்ல ஆயின
நன்மை அடையுமே

என்ற திருநாவுக்கரசின் வாக்கில் தான் எத்தகைய, மனோதத்துவ உண்மையைக் காண்கிறோம்.

* * * *

கோயிலுக்கு முன் சொக்கப் பனை கொளுத்திக் கார்த்திகை தீபம் கொண்டாடுவதில் சிறுவர்களுக்கும் பெரு மகிழ்ச்சி, பெரியவர்களுக்கும் அப்படியே, சொக்கப்பனை ஜுவாலை வீசி ஓங்கி எரியும் அழகு, சாதாரண மனிதர்களையும் கவருகிறது. மனிதருள் முனிவர்களையும் வசீகரிக்கிறது. இக்காட்சி இன்பத்திலே, சிவ பெருமான் சாதுக்களை ஹிம்சித்து வந்த அசுரர் களின் தேர்களை கொளுத்திவிட்டார் என்பது போன்ற புராணக் கதைத் துணுக்குகளும் நினைவிற்கு வருகின்றன.

குளிர்ந்த மாதமாகிய கார்த்திகையில் சொக்கப் பனையின் வெப்பத்தை ஓரளவு அணுகி நின்று, அனுப விக்கக் கூடுமல்லவா ? இவை அடிப்படையாகக் கொண்டு ஒரு புராணக் கதைத் துணுக்கும் தோன்றி யிருக்கிறது. மகாபலிச் சக்கரவர்த்திக்கு உடம்பிலே ஒரு வகை நோய் ஏற்பட்டதாம். அந்த நோவு—உணர்ச்சி யைத் தீபவிழாவைக் கொண்டாடி அத்தீபத்தை அணுகி நின்று, அவன் போக்கிக் கொண்டானும்.

தேவி மகிஷாசுரனுடன் போரிட்ட பின் கார்த்திகை விழாவைக் கொண்டாடித் தன்னைத் தூய்மை செய்து கொண்டதாகவும் ஒரு புராணத் துணுக்கு உண்டு இத்தீப விழாவைப் புராணம் பிரஸ்தாபிப்பது போல் கல்வெட்டுக்களும் பிரஸ்தாபிக்கின்றன.

ராஜேந்திர சோழ தேவனின் கல்வெட்டுச் சாசனம் ஒன்று காளத்தி ஆலயத்தில் காணப்படுகிறது. இதில் தீப விழா பிரஸ்தாபம் வருகிறது.

இந்த விழாவில் தீபங்களுக்கு நெய் வழங்கியதைக் குறிப்பிடுகிறது விஜயநகரப் பேரரசனுகிய வீரப்பிரதாப கிருஷ்ண தேவ மகாராயனின் சாசனம் ஒன்று இதைத் தேவிகா புரத்திலுள்ள பிரகதாம்பாள் கோயிலில் காணலாம்.

பனி நீராடும் பெண்கள் தாங்கள் நோற்கும் நோன்பின் ஒரு பகுதியாக அந்நீராட்டத்தை மேற் கொள்கிருர்கள். அப்போது குளிருக்கு மருந்தாகத் தழலாடும் இறைவனின் பேரைச் சொல்லுகிருர்கள் என்கிறது திருவெம்பாவை, தீபவிழாக் கொண்டாடு வதும் பிறவிக் குளிருக்கு ஓர் அருமருந்து என்பது பக்தர் களின் மனேபாவம், மனேதத்துவ நிலை.

## 2. புராண வருணனைகளும் புதை பொருளும்

ஆக்கல், அளித்தல், அழித்தல், ஆகிய முத்தொழில் களையும் தெய்வத்தின் முத்தொழில் விளையாட்டு என்கிறது இந்திய தத்துவ மேதை. தெய்வ மேதையும், மூன்று அம்சங்களில் ஆக்கலும் அளித்தலும் (படையும்-பாதுகாப்பும்) இடம் பெற்றிருப்பது போல், அழித்தல் என்ற சங்காரத் தொழிலும் இடம் பெற்றிருக்கிறது என்பதை வற்புறுத்தியுள்ள நம் தத்துவ மேதையை என்னென்பது ?

அழிவு இல்லாவிட்டால் புதிய படைப்பிற்கு இடம் எங்கே? அழித்தல்தான் எதற்காக நடைபெற வேண்டும்? அழிவு என்பதன் சாரம் விடுதலை. எனவே விடுதலை அல்லது முத்தியை அருளும் தெய்வம் சிவன் தான் என்கிறது சைவம். சங்காரமூர்த்தியே முழுமுதற் கடவுள் என்று சைவர்கள் கூறுவது கூர்ந்து நோக்க தக்கது.

இது சிந்தனைக்கு உரியது; மதவெறிக்கு உரியதோ! சிந்தித்துப் பாருங்கள்.

இந்த அடிப்படைக் கருத்தை அடிநிலமாகக் கொண்டு, வேரூன்றித் தளிர்விட்டுப் படர்ந்திருக்கிறது திருவண்ணாமலைத் தீபத்தின் கதை.

படைப்பு மேதையும், காப்பு மேதையும், புரட்சிகர மான அழிவுக்கு அதிமுக்கிய இடம் கொடுத்துத்தான் ஆக வேண்டும். படைப்பே சிறந்த தொழில், பாதுகாப்பே

உயர்ந்தநிலை என்றெல்லாம் வாதாடுவது விளையாட்டே. இதைப் புலப்படுத்துகிறது பிரமனும் திருமாலும் வரலாற்றுக்கு எட்டாத ஒரு புராண காலத்திலே 'நான் பெரிய கடவுள், நான்தான்' என்று பூசல் இட்டதாக வரும் சிவபுராணக் கதை.

இச்சண்டையால் விளைந்த பயன்தான் என்ன? கலகம், கலக்கம் இவ்வளவே. திருமாலும் பிரமனும் போராடியதால் உயிர் குலத்தின் ஒருமைப்பாடு சிதைந்து துன்பம் பெருகியதாகப் புராணம் சொல்கிறது.

தேவர்கள் ஒளிமேனியராய் கட்புலனாகாது நம்மைக் காக்கின்றனர் என்ற புராண மனோபாவத்தையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். காற்று வீசினால் அங்கே ஒருகடவுள், வாயுபகவான். கனல் ஜுவலித்தால், அங்கும் ஒரு தேவ நண்பன் முகம் காட்டுகிறான். நீர் பெருக்கும் தேவருள் ஒருவனது (வருணனது) நட்பு முகத்தைக் காட்டுவதுதான். கங்கையில் கங்காதேவியை காண்கிறோம். மண்ணோ வெறும் மண் அன்று, மண்மகளாகிய பூமிதேவி. ஆகாயத்திலோ ஆகாயவாணி (நமது ரேடியோ நிலையம் அல்ல). இப்பேர்ப்பட்ட தேவர்கள் சிவ பெருமானிடம் போய், 'அவர்கள் சண்டையை ஒழிக்க வேண்டும்; உலகத் துன்பத்தை நீக்க வேண்டும்' என்று முறையிட்டுக் கொள்கின்றனர். இக்கதையிலே.

சிவபெருமான் இறங்கிறார். அழிவுக் கடவுள் அருட்பெருங் கடவுளும்தானே! ஒரு பெரிய நெருப்பு மலையாகத் தோன்றுகிறார் அடியும் முடியும் காண முடியாத மலை. பிரமன் திருமால் ஆகியவர்களுக்கு முன்னே, சுடர்ச் சோதியாக வளருகின்றது.

பிரமன் நாமகளை நாவில் உடையவன் அல்லவா? கல்வித் தெய்வத்தைத் தேவியாகப் பெற்றிருப்பவன் அல்லவா? கல்வி, உயர உயரப் பறந்து, விண்முட்ட நிமிரும் ஆணவத்தை வளர்க்கக் கூடியதுதானே. பிரமன் அன்னப் பறவையாகப் பறந்து முடி காண முயன்றது பொருத்தமே. அம் முயற்சியில் தோல்வி கண்டதும் பொருத்தம்தான்.

திருமால் செல்வத்தின் அதிதேவதையான திரு மகளை மார்பில் கொண்டிருக்கிறன் என்பது பிரசித்தம். செல்வம், வராக வடிவில் அடிதேடப் புறப்பட்டது என்ற கதைப் பகுதிக்கு உரிய உட்பொருளும் பிரசித்த மானது.

அறிவு ஆகாயம் அளாவ, செல்வம் பாதாளம் பாய இரண்டும் உண்மை காண்பதற்கில்லையே.

இயன்ற அளவு திருமால் ஆழமாகச் சென்று தோண்டி தோண்டிப் பார்த்தும் திருவடியைக் காண வில்லை என்ற கதைப் பகுதியிலும் மதவெறியைக் காண வேண்டும் என்பதில்லை.

அறிவு, திருமுடி காணுது விண்வெளியில் இருந்து திரும்பியது. இக்கதைப் பகுதியில் வேறொரு விவரமும் புராணக் கதையில் கிடைக்கிறது.

ஒரு தாழம்பூ மிக விரைவில் கீழே இறங்கி வந்து கொண்டிருந்ததைப் பிரமன் காண்கிறன். அதனுடன் அன்னப் பறவை உரையாடுகிறது. பூவைப் பறவை விசாரித்துப் பார்த்தது; தம்மால் திருமுடி காண இயலாது என்பதைப் பிரமன் தெரிந்து கொள்ளுகிறன்.

மேலும் ஒரு விவரம். தாழம் பூவைப் பொய்ச் சாட்சிச் சொல்லும்படி வேண்டிக்கொள்கிருன் பிரமன். அதுவும் உடன்படுகிறது. 'நீ பரம்பொருளின் முடி கண்டது உண்மை என்பேன்' என்கிறது. தாழம்பூ 'நானும் நீயும் ஒன்ருகத் திருமுடியிலிருந்து புறப்பட்டுக் கீழே இறங்கி வருவதாகக் கூறுவேன்' என்கிறது. நிலத்தை அகழ்ந்து போய்த் திருவடி காணுது திரும்பிய திருமாலுக்கும் இச் செய்தி தெரிவிக்கப்படுகிறது. எனினும் திருமால் 'அடி காணவில்லை' என்ற உண்மையை ஒப்புக் கொள்கிருர்.

அந்தப் பெரிய நெருப்பு மலையிலிருந்து சிவபெருமான் வெளித் தோன்றுகிருர். பிரமனும் தாழம்பூவும் கூறுவது பொய் என்று கண்டிக்கிருர். பொய் பேசியதால் பிரமனுக்கு கோயிலும் (தனிக் கோயிலும்) இல்லை; வழிபாடும் இல்லை. இது சிவசாபம் என்கிறது புராணம்.

சிவ பூஜைக்கு ஆகாத பூ என்று தாழம்பூவும் ஒதுக்கப்பட்டுத் தண்டனைப் பெற்றிருக்கிறது.

திருமால் உண்மை கூறியதால் கோயிலும் வழிபாடும் பெற்றுப் பிரமனை விடப் பெரிய கடவுளாக மதிக்கப் படுகிருனும். கடைசியாகச் சிவபெருமான் தம்மை லிங்கத்திலும் வேறு உருவங்களிலும் வழிபடலாம்; வழி பட வேண்டும் என்று அந்த அவசியத்தை வற்புறுத்து கிருர் விளக்கமாக.

அப்பால் சிவபெருமான் ஒரு சிறு மலையாகக் குறுகி, அம்மலைச் சாரலில் லிங்க வடிவமாகவும் தோன்றுகிருர். இது திருவண்ணுமலையும் திருக்கோயிலும் என்கிறது புராணம்.

மெய்ப் பொருளாகிய சிவபெருமான் அனற் பிழம்பாக உருக்கொண்டதன் நினைவுக்கு குறிதான் ஒவ்வொரு ஆண்டிலும் கார்த்திகை நன்னாளில் நடைபெறும் தீப விழா. திருவண்ணாமலையின் உச்சியில் ஜோதி விளக்கம் காட்டுவது இவ்விழாவின் சிறப்பியல்பு.

திருவண்ணாமலையின் அடிவாரத்தில் காட்சி வழங்கும் லிங்கப் பெருமானே அண்ணாமலையார்.

இப்புராண கதையின் புதை பொருள் சிந்தனைக் குரியது ; சிரிப்புக்கோ வெறுப்புக்கோ உரியதன்று; உண்மையைக் கண்டு காட்டுவதில் விஞ்ஞான வழி வேறு ; புராண வழி வேறு.

நம்புவது சைவர் உரிமை ; நம்பாததும் சைவர் அல்லாதார் உரிமைதான்.

நம்பல் என்பதுவே
அன்பின் நிலைமை

என்பது மனோன்மணிய வாக்கு. பக்தியின் இதயம் பரம விசுவாசம்.

இக்கதை சிவமகா புராணம், சிவ ரகசியம், அருணாசல புராணம், அருணகிரி புராணம் முதலிய பல புராணங்களில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளன.

புராண பாதையில் பரம்பொருள் உண்மைக்கு ஒரு விசித்திரக் கற்பனை இது எனலாம். கற்பனைகளில் புதைந்து காணும் உண்மைப் பொருளாகிய சிந்தனைகள் கலைச் சித்திரமாக உருவாகி வளர்கின்றன. சித்திரம் ஆகின்றன; சிற்பம் ஆகின்றன; கவிதையாக வருகின்றன.

அண்ணுமலைத் தீப விழாவின் அற்புதமான புராண வர்ணிப்பில் அழகும் இருக்கிறது. உண்மையும் ஒளித் திருக்கிறது.

சுவைத்துப் பாருங்கள்! விசுவாசம் உள்ளவர்களே சுவைத்து உணருங்கள்! எல்லாம் வல்ல சிவபெருமான் சைவர்களுக்கு மட்டுமல்ல, எல்லாருக்கும் அருள்புரிவார்! என்பதே சைவர்களின் கொள்கையும்.

## தேவார திருவாசகங்களில் தீபக் கதை

செருக்குடன் நோக்குவோர் உண்மை காண்பதில்லை; அறிவு 'நான் எவ்வளவோ அறிந்திருக்கிறேன் பார்!' என்ற நிலையில் பார்க்கும் போது அது மெய்ப் பொருள் காண்பதற்கில்லை. அது காண்பது பொருள் அன்று; இருள் தான்! அருளால், அருள் நெறியே சென்று, இறைவனது திருவருளையே கண்ணுக இசைத் துக்கொண்டு, காணும் போதுதான் எப்பொருளிலும் மெய்ப்பொருள் காண்பது சாத்தியமாகும். இப்பெருங் கருத்தை பிரமனும் திருமாலும் அடிமுடி காணவில்லை என்ற கதையின் உட்பொருளாகக் காட்டுகின்றன தேவாரமும் திருவாசகமும்.

இக்கதை ஆதியில் திருவண்ணுமலைக்கே உரிய கதையாகத் தோன்றியிருக்க வேண்டும்.

அழலாகிய அண்ணுமலை
அண்ணல்

என்ற வாக்கிலே இக்கதைச் சுட்டிக் காட்டப்படுகிறது. இப்பெருமானை 'எரியாகி உயர்கின்ற பரண்' என்றும் குறிப்பிடுகிருர்கள்.

இத்தீபக் கதையில் மதாபிமானத்தை மட்டும் காணுது ஒரு சமரசப் பெருங்கருத்தைபும் காண்பது தான் அறிவுடைமைக்கு அழகு. அதனுல்தான் திரு ஞான சம்பந்தர் தமது தேவாரத்தில் ஒவ்வொரு பதிகத் திலும் இத் தீபக்கதையை ஒன்பதாவது பாட்டில் கூறியுள்ளார்.

## தீப விழாவுக்கு வேருெரு கதை

உமையம்மையாரும் சிவபெருமானும் ஒரு சமயம் விளையாடிக் கொண்டிருந்தார்களாம். காதலர் விளை யாட்டுத்தான், கயிலையிலும் காதலா ?— என்று கேட்கிறீர்களா ?— ஆம்; அங்கும் காதலுக்கும் இடம் உண்டு. அங்கே இல்லாதது இங்கும் இருக்க முடியாதே! எனத்துணிந்து பதில் கூறுவர் நம் பக்த மணிகள்.

மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகத்தில் 'பெண் பால் உகந்த பெரும் பித்தன்' என்று சிவபெரு மான் வருணிக்கப்படுவதையும் காண்கிருேம். இப்படி ஒரு பெண் ஏச, வெருெருத்தி 'இக்காதல் சிவபெரு மானுக்கும் உமையம்மைக்கும் இடையே நிகழவில்லை என்ருல், இவ்வுலகத்திலும் காதல் இன்றி, வாழ்க்கையே அற்றுப்போகும். என்று துணிந்து பதில் கூறுவதைக் காண்கிருேம்.

நித்தியமான காதலர்களாகச் சிவபெருமானையும் உமையம்மையையும் சிவயோகிகள் வருணித்திருப்பது போல், திருமாலையும் திருமாமகளையும் வைணவர்களும் வருணித்திருக்கிருர்கள். ஆம்; காதலும் காதல் விளை யாட்டும் அங்கும் உண்டு, இங்கும் உண்டு எனத் துணிகின்றது இந்துக்களின் தத்துவ மெய்ஞ்ஞானம்.

உமாதேவி விளையாட்டாக சிவபெருமானுடைய கண்களைத் தம் கைகளால் மூடினுள், கண் பொத்தி விளையாடுவது இன்றும் குழந்தைகளுக்கும் காதலர்களுக்கும் இடையே நிகழ்வதுதான். நாம் கண்ணை மூடி விளையாடுவதில் ஆபத்து ஒன்றும் வருவதில்லை. ஆனுல் உமையம்மை இறைவனுடைய கண்களைத் தம் கைகளால் மூடியதும் வந்தது ஆபத்து என்கிறது புராணம்.

ஒரு கணம்தான் தேவி ஐயனுடைய கண்களை மூடி மறைத்தாளாம், ஆனுல் சிவலோகத்தில் ஒரு கணம் நமக்கு பலயுகங்கள் ஆகும்!—இல்லையா?

பல்லூழி காலம் கோடிக்கணக்கான உயிர்களுக்கு ஒரே இருட்டாகி விட்டதாம் சிவனுடைய கண்கள் மூடப்பெற்றதும்.

வேடனுல் துரத்தப்பட்ட ஆஸ்ட்ரிச் என்ற தீக்கோழிப்பறவை தன் கண்களைப் புதைத்துக் கொள்ளுமாம், வேடன் பிடித்துவிடக் கூடுமே என்ற பெரும் பயத்தினுல். அந்த நிலையில் உலகம் தனக்கு இருண்டு போக, வேடனுக்கும் அந்த இருட்டில் கண் தெரியாது என்ற எண்ணமாம் அந்தப் பேதைப் பறவைக்கு.

இந்தக் கற்பனை உண்மையாகி விட்டது இறைவன் கண்களை இறைவி தன் மலர்க்கைகளால் மறைத்ததும். எல்லா உயிர்களும் உலகங்களும் இறைவனுக்குள் அடக்கம் தான் என்ற தத்துவப்பெருங்கருத்தை வெளியிடுகிறது இக்கதை.

உலகமெல்லாம் போர்த்துவிட்ட இருள் எவ்வளவு துன்பம் விளைத்திருக்க வேண்டும் என்பதைச்

சொல்லவா வேண்டும்? கருணையே வடிவமாகக் கொண்ட சிவபெருமானுல் எப்படிப் பொறுத்திருக்க முடியும்?

இரண்டு கண்களும் மூடப்பட்டதும் நெற்றியிலே ஒரு கண் தோன்றிய தாம். அக்கண்ணின் மூலம் தோன்றிய ஒளி உயிர்களின் துன்பத்தைப் போக்கிய தாம். இப்பொழுது உமையம்மையின் நிலே என்ன? கருணை சிவனுக்கு வடிவம் என்ருல், அக்கருணையின் சாரம் உமையம்மை.தானே.

'என் விளையாட்டால் விளைந்தது இப்பெருந்துன்பம். அதற்கு உரிய கழுவாய் (பிராய சித்தம்) நானும் மேற் கொண்டு தான் ஆகவேண்டும் என சிந்தித்தாள் அம்மை.

காஞ்சி மாநகரில் சிவ பூசை செய்தாளாம் முதல் முதல். அங்கே இறைவன் தோன்றி, 'நீ திருவண்ணு மலேயில் நம்மைப் பூசிக்க வேண்டும். பிறகு நமது இடப் பாகம் பெறுவாய்' என்று அருளினுராம்.

அப்படியே அம்மை அண்ணுமலேயில் கடுந்தவம் புரிந்து கார்த்திகைத் தீப விழாவையும் நடத்தினுள். கார்த்திகைத் திருநாளில் அம்மை பரஞ்சுடராகிய இறைவனே வணங்கியதும், மலே மீது ஒரு சோதி உண்டாயிற்ரும், அதில் இறைவன் எழுந்தருளி அம்மையை நோக்கி, 'இம்மலேயை வலம் வருவாய்' எனக் கட்டளேயிட்டார். அப்படி அம்மை வலம் வரும் போது மேற்குத் திசையில் இடப வாகனத்தின் மீது பெருமான் காட்சி வழங்கினுராம்.

அந்த இடத்திலேயே இப்பொழுது அடி அண்ணு மலே என்ற கோயில் இருக்கிறது என்று ஊகிப்பவர் களும் உண்டு. அம்மை வலஞ்செய்து முடித்த உடன்,

வடகிழக்கு மூலையில் இறைவன் தோன்றி தேவியைத் தழுவிக் கொண்டாராம். இருவர் உருவமும் ஒரு வடிவே என்று சொல்லும்படி அவர்கள் ஒன்றுபட்டனர். இதை அர்த்த நாரீஸ்வரக் கோலம் என்பர்.

இக்காட்சி கார்த்திகைத் தீபவிழாவில் இன்றைக்கும் தீப தரிசன வேளையில் தொண்டர்களுக்கெல்லாம் கிடைக்கும்படி அர்த்தநாரீஸ்வரர் வருகை அமைந்திருக்கிறது.

தீபவிழாவின் பிரசித்தமான · கதை முன்னே சொன்னது தான். இந்த இரண்டாம் கதை அவ்வளவு பிரசித்தமானது அன்று.

இந்த இரண்டு கதைகளிலும், நெருப்பு மயமான ஒளி உருவமாக மெய்ப்பொருளாகிய பரம்பொருள் விளங்குகிறது என்ற உண்மை வற்புறுத்தப்படுகிறது.

இரண்டாம் கதையில், ‘உமையாளொடும் உடனாகிய ஒருவன்’ என்ற அர்த்தநாரீஸ்வர நிலையும் வற்புறுத்தப் படுகிறது. இந்த உமையை ‘உண்ணாமுலை உமை’ அதாவது என்றும் கன்னியாகிய உமையம்மை — என்கிறார் ஞானசம்பந்தர்.

## 3. நூல்களிலே காணும் அண்ணுமலை

வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த திருவண்ணுமலை, ஆர்க்காடு என்ருல் ஆத்திக்காடு. இதை 'ஆற்காடு' என்று தவருக எழுதுவது உண்டு இத்தவறின் அடிப்படையில் தலபுராணக் கதைகளுக்கும் பஞ்சமில்லை.

ஆற்காடு என்பதை 'ஆறுகாடு' என்பதன் சிதைவாகக் கொண்டு வடமொழியாளர்கள் தலபுராணம் கட்டி வைத்ததுண்டு. ஆர்காடு என்பதை வடமொழியில் க்ஷடாரணியம் என்பர். க்ஷடாரணிய க்ஷேத்திரம் என்று ஆர்காட்டைச் சிறப்பித்து அண்மையில் புராணம் புனைந்திருக்கிருர்கள்.

திருவண்ணுமலையை இருப்புப்பாதை வழியை ஒட்டிச் சுட்டுக் காட்டுவதென்ருல், இத்தலம் விழுப்புரத்திற்கும் காட்பாடிக்கும் உள்ள இருப்புப்பாதையின் இடையில் அமைந்திருக்கிறது எனக் கூறலாம். பல சத்திரங்களும் மடங்களும் இங்கே வழிபாடு செய்ய வருவோருக்கு வசதியளிக்கின்றன. ரயிலடியிலிருந்து ஒரு கல் தொலைவில் இருக்கிறது திருக்கோயில். அண்ணுமலை உச்சி கடல் மட்டத்திற்கு மேல் 2668 அடி உயரமானது. கோயில் தமிழகத்திலுள்ள மிகப் பெரிய கோயில்களுள் ஒன்ருகும்.

ஒரு பல்கலைக் கழகத்தை சிறப்பாக நடத்துவதற்குரிய இடவசதி இருக்கிறது இத்திருக்கோயில். ஏன், இங்கேயுள்ள சிற்பச் செல்வமும் விழாக்களும் கோபுரங்கள் மண்டபங்கள் முதலியனவும் வேறு சிறப்புகளும் இக்கோயிலுடன் தொடர்பு கொண்டு தோன்றிய நூல்

களும் கலைகளும் கதைகளும் கவிதைகளும் இதை ஒரு ஞானப் பல்கலைகழகமாக்கியுள்ளன என்பதில் ஐயமில்லை.

எத்தனை நூல்கள் திருவண்ணுமலையைப் புகழ்ந்து தமிழ் இலக்கியப் பரப்பிலும் இதற்கு ஒரு சிறப்பான இடம் அளித்திருக்கின்றன! தேவாரத்திலே முதல் திருமுறையிலும் நான்காம் திருமுறை ஐந்தாம் திருமுறை களிலும் பதிகங்கள் இத்தலத்தையும் மலையையும் கோயிலையும் சிறப்பிக்கின்றன.

உலகங்களை யெல்லாம் ஈன்றெடுத்தவளாயினும் உமையம்மை இன்னும் கன்னிதான் என்றுமே கன்னி தான். இந்த அன்னையுடன் உடனுகிய 'ஒருவன்' தான் முழு முதற்கடவுள் என்று பொருள்படத் திருஞான சம்பந்தர் பாடியிருப்பவைச் சிவநேசர்கள் மறுப்பதற் கில்லை.

திருவாசகம் மேலும் சிறப்பிக்கிறது திருவண்ணு மலையை. திருவெம்பாவையிலும் திரு அம்மானைப் பாடல்களிலும் அண்ணுமலையும் தீப விழாக் கதையும் பெரிதும் பாராட்டப் பெற்றுள்ளன. சிதம்பரம் என்ற தில்லைத்தலத்திற்கு அடுத்தபடியாக மணிவாசகப் பெருமானை வசீகரித்தது திருவண்ணுமலை.

திருவெம்பாவைக் கவிச் சித்திரங்களை மணிவாசக ருள்ளத்திலே உருவாக்கியவை திருவண்ணுமலைக் காட்சி களே. பல தலங்களையும் தரிசித்துக்கொண்டே தில்லைக்கு வரும் வழியில் மணிவாசகர் திருவண்ணுமலை யில் தங்கினுர். அண்ணுமலையானைத் தரிசித்தார்; திருவருளைச் சிந்தித்தார். சிற்றஞ் சிறு காலையில் பெண் கள் துயில் உணர்ந்து எழுந்து வீடு வாசல்களை மெழுகித் தூய்மை செய்து அழகழகாகக் கோலங்கள் போடு வதைக் கண்ணுற்ருர்.

## திருவண்ணுமலேயும் திருவெம்பாவையும்

திருவண்ணுமலைப் பெண்கள் அகத்தையும் புறத்தையும் ஒருங்கே தூய்மையாக்கி அழகு செய்து கொண்டு அணியணியாகப் பொய்கைக்கு நீராடப் புறப்பட்ட காட்சி மணிவாசகரின் பக்தி உள்ளத்தைப் பரவசமாக்கியது. அப்போது உதித்திருக்க வேண்டும்,

சித்தம் அழகியார்
பாடாரோ நம்சிவனை ?

என்ற அழகிய செய்யுளடி.

மணமாகாத கன்னிப் பெண்கள் கலகல வென்று உரையாடிக் கொண்டும் பாடிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் ஒருவரை ஒருவர் பரிகசித்துக் கொண்டும் சென்ற காட்சியையும் மாணிக்கவாசகர் கண்ணுரக் கண்டிருக்கிருர்.

நிலவு வீசுவது போல் ஒளி செய்த அம்முகங்களையும், அம்முகங்களிலே தெய்வக் களிதுலங்க மலர்ந்த புன்னகையையும் காலை வேளையில் கண்டிருக்கிருர். 'இவர்களுக்குக் கள்ளம் கவடற்ற இப்புன்னகை போதாதோ ? பொன் நகையும் வேண்டுமோ ?' என்று அதிசயமாய் அவர்களை உற்றுப் பார்த்துமிருக்கிருர். இப்பெண்கள் ஒருவர்மீது ஒருவர் சொல்லம்பு தொடுத்துப் பூசலிடுவது போல் விளையாடுவதையும் கவனித்திருக்கிருர்.

உற்றுப் பார்த்தவர் ஊடுருவியும் பார்த்திருக்கிருர் இறையருளே கண்ணுகக் கொண்டு. அப்பார்வையில் வேகமும் இல்லை; மோகமும் இல்லை; பரிவும் பக்தியும் மெய்யன்பும் பிரதிபலித்தன. படுக்கையில் மெய்மறந்து பரவசமாகிக் கிடக்கும் பெண்களையும் பார்க்கிருர். விழித்த கண்கள் மகிழ்ச்சியால் விரிந்து உறங்கும்

பெண்களை நோக்கி உறவாடுவதையும் உரையாடுவதையும் காண்கிறார்.

அலங்காரப் பிரியர்களான பெண்கள் பேசுவதும் ஏசுவதுமாக விளையாடுவதும் இறைவனது அருள் விளையாட்டைத் தான் நினைவூட்டுகின்றன. முத்தன்ன வெண்நகையார், வண்ணக்கிளி மொழியார், தேன் மொழியார், மான் விழியார் எல்லாரையும் இவர் பார்த்த பார்வையும், அவர்கள் தேன்போல், பால்போல், தித்திக்கப் பேசிய அந்தப் பேச்சொலியும் சிவ பக்தியுடன் கலந்து, மணிவாசகரின் திருவெம்பாவை வாக்கிற்கு ஊட்டம் தந்திருக்கின்றன.

சுருங்கச் சொன்னால், திருவண்ணாமலைப் பாவையர் மணிவாசகரின் இருபது பாவைப் பாடல்களுக்கும், உயிரும் உணர்வும் தந்து உதவியிருக்கிறார்கள், எனலாம்.

ஆதியும் அந்தமும்
இல்லா அரும்பெருஞ்
சோதியை

என்ற திருவெம்பாவைத் தொடக்கமே, இப்பாடல்கள் அண்ணாமலை மயமாகவே இருக்கின்றன என்பதற்குச் சான்றுதானே.

## பெரிய புராணமும் திருவண்ணாமலையும்

(ஐந்து கார்த்திகைத் தீபங்கள்)

சேக்கிழார் அருளிய பெரிய புராணத்திலே ஏழு பாடல்கள் திருவண்ணாமலையைச் சிறப்பிக்கின்றன. இது மட்டுமா? திருவண்ணாமலைக் கார்த்திகைத் தீபத்தைக் குறிப்பாக நமக்கு நினைவூட்டுமாறு அமைந்திருக்கும் பகுதிகளையும் பெரிய புராணத்தில் காண்கிறோம்.

இருக்கு வேளூர் என்ற தலத்தில், பொருள் செல்வத்திலும் அருட்செல்வத்திலும் குறைவு இல்லாத செல்வர். ஒருவர் கோவிலில் திருவிளக்கு எரிப்பதையே தமது தொண்டாகக் கொண்டிருந்தாராம்.

ஓவாத ஒளிவிளக்குச்
சிவன்கோயி லுள்எரித்து

என்பது இவர் வாக்கு.

உயிர் குலத்தில் இதயத்திலே ஓயாத ஒளி விளக்காய் ஒளிரும் சிவ பரஞ்சுடருக்கு ஒரு நினைவுக் குறியாக இந்த அன்புச் செல்வர் திருவிளக்கேற்றிச் சிவ சந்நிதியைத் தொழுது வந்தார் என்பது சேக்கிழார் குறிப்பு.

இப்படிச் செய்து வருகையில் சிவசோதனையாக இவருக்கு வறுமை நேர்ந்தது. அதனால் இவர் ஊரை விட்டுப் போகவும் நேர்ந்தது: சிவபக்தர் சிதம்பரம் போனார். சைவ உலகின் ஞானராஜதானியாகிய தில்லை நகரில் ஆடும் பெருமானைத் தரிசித்தார். பழைய திருத்தொண்டைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்ற உறுதி இங்கும் ஏற்பட்டது.

வீட்டுப் பொருள்களை யெல்லாம் விற்றுவிற்று தீபம் ஏற்றும் தொண்டு நிகழ்த்தினார். பின்னர் கணம்புல் என்னும் ஒருவகைப் புல்லுக்களைத் தில்லைக்கு அருகிலுள்ள காட்டிலிருந்து அறுத்துக் கொண்டு வந்தார் ; அவற்றை விற்று நெய் வாங்கி தீபம் ஏற்றினார். இதனால் இவருக்கு கணம் புல்ல நாயினார் என்ற பெயர் வந்தது.

ஒருநாள் இவர் கொண்டுவந்த புல் விற்கவில்லை. அதுவும் திருவருளின் சோதனை என்றே கருதினார். கணம் புல்லர் சோர்ந்து போகவில்லை. அப்புல்லுக்களைத் திரித்து விளக்கு எரித்துப் பார்த்தார். புல்லுப்

போதுமான அளவிற்கு இல்லை. இதுவும் திருவருளின் சோதனைதான் என்பது இவருக்குத் தெரியாதா?

இவரா இத்தகைய பரீட்சைகளில் தவறிப் போகிறவர். அப்புல்லோடு தம் முடியையும் எரிக்கத் தொடங்கி விட்டார். (இன்றைய விஞ்ஞான உலகிலும், தம்மையே அழித்துக் கொண்டு விஞ்ஞான உண்மையைக் கண்டு பிடிப்பவர்களை நாம் காண்கிறோமல்லவா?) இந்த விஞ்ஞானிகள் தங்களையா அழித்துக் கொள்கிறார்கள்? அறியாமை என்ற கவசத்தை யல்லவா அழிக்கிறார் கள். இவ்வாறே சேக்கிழார் பெருமான் கணம் புல்லரின் தொண்டினையும் குறிப்பிடுகிறார். 'முடியையா எரித் தார் இந்த நாயனார்? தீவினையின் கட்டு என்ற பாச பந்தத்தை அல்லவா எரித்துவிட்டார்' என்பதே சேக்கிழார் கூற்றின் பொருளாகும்.

தொண்டை மண்டலத்திலே வேற்காடு என்ற பதியிலே ஒரு வேளாளர் சிவனடியார்கள் விரும்பும் பொருளைக் கொடுப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந் தார். அவர்களை அமுது செய்வித்த பின்பே தாம் உண்பார். நாளுக்குநாள் அடியவர் கூட்டம் பெருகிவர இந்த நாயனார் ஏழையாகி விட்டார். இந்நிலையில் சூதாடியாவது பொருள் தேடி அடியவர்களுக்குத் தொண்டாற்றத் துணிந்தாராம். இவரை மூர்க்க நாயனார் எனக் குறிப்பிடுகிறது பெரிய புராணம்.

சோழ நாட்டிலே சிறப்புலியார் என்ற ஒரு பக்தப் பெருவள்ளல் இருந்தார். இவர் சிவனடியார்களைக் கண்டதும் அடியில் தாழ்ந்து வணங்கி எல்லா உதவி களும் செய்வதற்கு முற்பட்டார். இவருடைய பணிகளை யெல்லாம் இடையறாத ஒரு பொற்சரடு போல் கோத்து வைத்தது அடியவர் மீது இவருக்கு என்றும் குன்றாமல் இருந்த அன்புதான்.

பக்தி யுலகில் இத்தகைய நாயனர்களின் கதைகள் ஒரு சோதனை விளக்காக மெய்யன்பர்களுக்கு உதவும் என்பர்.

இந்த நாயன்மார் மூவருக்கும் குருபூசை கார்த்திகை மாதம் நடைபெறுகிறது. இவர்களுடன், குழல் இசைத்துச் சிவ பெருமானை வசீகரித்த ஆனய நாயனருக்கும் இம் மாதத்திலே தான் குருபூசை. காந்தியடிகள் போல் ஒரு சத்தியாக்கிரகியாக விளங்கிய மெய்ப்பொருள் நாயனருக்கும் குருபூஜை கார்த்திகை மாதத்தில் தான். இந்த ஐந்து சிவநேசர்களையும் 'ஐந்து கார்த்திகைத் தீபங்கள்' என்று நாம் போற்றலாம் என்பதைக் சேக்கிழாரின் ஒரு குறிப்பாக நான் கருதுகிறேன்.

## திருப்புகழும் அண்ணுமலையும்

திருப்புகழில் எண்பத்தேழு பாடல்கள் திருவண்ணுமலையைச் சிறப்பிக்கின்றன திருப்புகழின் ஆசிரியரான அருணகிரி நாதர் வாழ்ந்தது திருவண்ணுமலையில் தான். இவர் கி.பி. பதினைந்தாம் நூற்ருண்டின் இடைப் பகுதியில் இத்தலத்திலே மலையும் கோயிலும் போல் இன்றியமையாத ஒரு பகுதியாக வாழ்ந்தார் எனக் கருதலாம்.

இத்தலத்திலே உதித்த இவர் இங்கே வசித்திருந்து சிறந்த முருக பக்தராகிப் பல பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார். இவர் இங்குள்ள கோபுரங்களில் ஒன்றன் மீது ஏறி தற்கொலை செய்துகொள்ள முயன்ருராம். அப்போது முருகக் கடவுள் தோன்றி இவரைக் காப்பாற்றி உபதேசமும் செய்து மறைந்தாராம். இப்பெரியார் பல திருப்புகழ்ப் பாடல்களிலே அண்ணுமலையைக் குறிப்பிட்டிருப்பதில் அதிசயமில்லை.

கந்தபுராணத்திலும் திருவண்ணுமலையின் பெருமை கூறப்படுகிறது ஒரு பாட்டிலே, துறை மங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் இயற்றிய **சோண சைலமாலை** திரு வண்ணுமலையைச் சிறப்பிக்கும் நூல்தான். சோண சைலம் என்று திருவண்ணுமலைக்கு ஒரு பெயர்.

திரு அருணைக் கலம்பகம் என்ற ஒரு நூல் சைவ எல்லப்ப நாவலர் இயற்றியது. அருணை என்றும் திரு வண்ணுமலையைக் குறிப்பிடுகிருர்கள். திரு அருணை அந்தாதியும், குகை நமச்சிவாயர் இயற்றிய அருணகிரி அந்தாதியும் திருவண்ணுமலையைக் குறிக்கும் பிரபந்தங் களே? அருணை என்ற அருணகிரியைத்தான் அருணு சலம் என்றும் வடநூலார் வழங்குகின்றனர். இத்தலம் குறித்து பிரசித்தமாக இருக்கும் புராணத்திற்குப் பெயர் அருணுசல புராணம்.

குருநமச்சிவாயர் என்னும் சிவநேசர் **அண்ணுமலை வெண்பா** என்ற அழகான வெண்பாக்களை இயற்றி யுள்ளார். அண்ணுமலை சதகம் என்ற பிரபந்தம் திருச்சிற்றம்பல நாவலரால் இயற்றப்பட்டது. இன்னும் தனிப்பாடல்கள் பல, அண்ணுமலையின் புகழ் பாடி, இம்மலைக்கும் கோயிலுக்கும் தமிழர் உள்ளங்களில் ஒரு தனி இடம் அமைத்துக் கொடுத்துள்ளன.

* * * *

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசு சுவாமிகளும் அண்ணுமலையைத் தரிசித்தது போல் சுந்தர மூர்த்தி சுவாமிகளும் இம்மலையையும் கோயிலையும் தரித்திருக்கக் கூடும். இதைக் குறித்துப் பெரிய புராணத்தில் வெளிப் படையாகக் குறிப்பு ஒன்றும் காணப்படவில்லை. சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடியதாகப் பதிகமும் கிடைக்க வில்லை. ஊர்த்தொகை என்ற ஒரு பதிகத்தின் ஏழாவது

பாட்டிலே 'ஆனைக்காவில் அரனே! பரனே! அண்ணு மலையானே!' என்ற ஒரு குறிப்பைக் காண்கிறோம்.

பதிஞேராம் திருமுறையில் அண்ணுமலை பற்றிய குறிப்புக்கள் நக்கீரர், கபிலர், பரணர், பட்டினத்தார் ஆகிய நால்வர் வாக்காகக் காணப்படுகின்றன. ஆனல் இந்த நக்கீரர் முதலானவர்கள் சங்க காலத்துக்குப் பிற்பட்டவர்களே.

திருவண்ணுமலையைப் பாடியிருக்கும் பிற்காலப் பெரியோர்களில் குகை நமச்சிவாயரையும் குரு நமச்சிவாயரையும் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். அருணகிரி அந்தாதி இயற்றிய குகை நமச்சிவாயர் திரு வண்ணுமலையில் ஒரு சித்த புருஷாராக சில நூற்ருண்டு களுக்கு முன் விளங்கினுர் என்பர்.

இவருக்குச் சீடராக இருந்த நமச்சிவாயர் ஞான திருஷ்டி வாய்க்கப் பெற்றவராக இருந்தாராம். இவர் தம் ஞானநெடு நோக்கால் திருவாரூர், சிதம்பரம், முதலான இடங்களில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளைக் கண்டு, உரைத்தாராம். இவரைக் குருநமச்சிவாயர் என்பர்.

தம் சீடரின் பக்குவநிலை தமது நிலைக்கும் மேம்பட்டி ருந்ததை உணர்ந்து கொண்ட குகை நமச்சிவாயர் இச் சீடரைத் தில்லைக்கு அனுப்பி வைத்தாராம். தில்லையில் கனக சபையில் திரைச்சீலையில் நெருப்புப் பற்றியதை அருகே இருந்து காண்பது போல் திருவண்ணுமலையி லிருந்தே கண்டு கொண்டாராம் குரு நமச்சிவாயர். இச் சித்தியை ஞான திருஷ்டி என்று கூறுவதைக் காட்டிலும் 'மானசத் தொலைநோக்கு எனக் குறிப்பிடுவதே பொருந்தும் எனக் கருதுகிறேன்.

இத்தகைய தொண்டர்களின் வாழ்க்கை வரலாறு களில் உண்மை, கற்பனைகளோடு கலந்தே காணப் படுகிறது.

திருவண்ணுமலையில் வாழ்ந்தும் திருவண்ணு மலையைத் தரிசித்தும் பேறு பெற்றவர்கள் பலர். சிலரைத் தான் வரலாற்றுச் செய்திகளும் செவி வழிச் செய்தி களும் சுட்டிக் காட்டுகின்றன. 'நாம் அறிந்திருக்கும் கிறிஸ்து பெருமான் ஒருவரே; ஆனுல் நாம் அறியாத கிறிஸ்துக்கள் பலராவர்' என்ருர் ஒரு மேலே நாட்டுப் பேரறிஞர். அப்படியே, திருவண்ணுமலேயுடன் தொடர்பு கொண்டுபேறு பெற்றவர்களைக் குறித்து நாம் கூறுவதும் தவருகாது.

தரிசித்துப் பேறு பெற்றவர்களில் முருகப் பெருமானுக்கு முதல் இடம் தந்திருக்கிறது கந்தபுராணம். தாருகன் என்ற அசுரனைவதஞ் செய்து தெற்கு நோக்கி வந்து கொண்டிருந்தாரம் முருகவேள். வழியிலே காசியைத் தரிசித்தாராம். பிறகு ஸ்ரீபருப்பதம் கண்டா ராம். அப்பால் திருக்காளத்திக்கு வந்தாராம். வடக்கி லுள்ள காசியுடன் போட்டியிடும் காஞ்சி முதலிய தலங்களைத் தரிசித்து விட்டுத் திருவண்ணுமலையையும் தரிசித்தாராம்.

## 4. கல்வெட்டுக்கள் காட்டும் அண்ணுமலை

திருவண்ணுமலைக் கோயிலில் நூற்றுக்கணக்கான கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவை வரலாற்றை மூடி மறைக்கும் காலத்திரையில் சில துளைகள் போட்டிருக்கின்றன. இக்கல் வெட்டுக்களில் பெரும்பாலனவை, அரசாங்கத் தென்னிந்தியக் கல் வெட்டுப்பதிவு நிலையத்தினரால் பிரதி செய்யப் பெற்றுள்ளன.

அரசாங்கம் பதிவு செய்துள்ள சாசனங்களில் பெரும்பாலன சோழ மன்னர் காலத்தில் ஏற்பட்டவை. சங்ககாலத்துச் சோழர்கள் வாழ்ந்த காலத்தில் அல்ல; பிற்காலச் சோழப் பேரரசு தழைத்திருந்த காலத்தில் பொறிக்கப்பட்டவையே. நாயன்மார்—ஆழ்வார்களின் காலத்தில் பொறித்த சாசனங்களைக் காண்பதற்கில்லை.

கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் இடைப்பகுதியிலிருந்து—அதாவது மாணிக்கவாசகர் வாழ்ந்தகாலப் பகுதியிலிருந்து—பதின்மூன்ருவது நூற்ருண்டின் இடைப் பகுதி வரை உள்ள 400 ஆண்டுகளில் அரசர் வணிகர் முதலிய பல வகுப்பினரும் நிலம் பொன் கால்நடை முதலியவற்றை நன்கொடையாக அளித்த செய்திகளைத் தான் நமக்கு இப்போது கிடைத்திருக்கும் திருவண்ணுமலைக் கல்வெட்டுக்களில் காண்கிறேம்.

அண்ணுமலையாருக்குத் திருப்பணிகளுக்காக நன் கொடைகள் வழங்கப்பட்டன என்பதையும் கல் வெட்டுக்கள் தெரிவிக்கின்றன, நந்தவனம் அமைப் பதற்கும், திருமஞ்சனம் ஆட்டுவதற்கும், அமுது செய் விப்பதற்கும் நிலம் பொன் முதலியன அளிக்கப் பெற்றுள்ளன. அடியவர்களுக்கு அமுது அளிக்கவும்

நன்கொடை கொடுத்திருக்கிறுர்கள். இவர்களது மனப் பான்மையே

அன்பர் பணி செய்ய என்னை
ஆளாக்கி விட்டுவிட்டால்,
இன்பநிலை தானேவந்து
எய்தும், பராபரமே.

என்ற தாயுமானவர் வாக்கில் பிரதிபலிக்கக் காண்கிருேம்.

அண்ணுமலையாருக்குப் பல வகுப்பினரும் அளித்திருக்கும் நன்கொடைகளில் திருவிளக்கு ஏற்றுதல் முக்கிய இடம் பெருவதையும் காண்கிருேம். கோயிலில் திருவிளக்கு ஏற்றி வைப்பதற்கும் தீபப் பெருவிழாக் கொண்டாடுவதற்கும் அடிப்படையான பக்த மனுே பாவம் ஒன்றே.

பாண்டிய மன்னர் காலத்துக் கல்வெட்டுக்கள் சிலவும் காணப்படுகின்றன. சோழர் ஆட்சியில் ஒரு குறுநில மன்னனுக இருந்த பல்லவன் ஒருவன் பின்னுளில் சோழ மாநிலத்தின் பெரும் பகுதியையும் கைப்பற்றிக் கொண்டான். இவன் பெயர் கோப் பெருஞ்சிங்கன். இவன் காலத்துக் கல்வெட்டுகளும் திருவண்ணுமலைக் கோயிலில் காணப்படுகின்றன.

ஹெய்சாள (Hoysala) அரசனுன வீரவல்லாளத் தேவன் காலத்துச் சாசனங்களையும் இக்கோயில்களில் காணலாம். விஜயநகரத்து ராயர்கள் என்ற பேரரசர்கள் காலத்துச் சாசனங்களையும் காண்கிருேம். தஞ்சை நாயக்க மன்னர்கள் காலத்துச் சாசனங்களும் கோயிற் சுவர்களில் காணப்படுகின்றன. இவை மிகவும் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தவை. இவற்றின் காலம் பதின்மூன்ருவது நூற்ருண்டின் இடைப் பகுதியிலிருந்து பதினுருவது நூற்ருண்டின் இறுதி வரை ஆகும்.

பிற்காலத்தில் மிகச் சிறந்த திருப்பணிகள் பல கோப் பெருஞ்சிங்கனுலும் கிருஷ்ணதேவராயராலும், செல்லப்ப நாயக்கராலும் நிறைவேறியுள்ளன.

## நமக்குக் கிடைக்கும் செய்திகள்

பதினோராம் நூற்ருண்டின் முற்பகுதியைச் சார்ந்தது, முதல் ராஜேந்திரனின் கல்வெட்டு. திருவண்ணு மலே 'மதுராந்தக வளநாட்டுப் பெண்ணே வடகரைத் திருவண்ணுமலே' எனக் குறிக்கப் பெற்றுள்ளது. பன்னிரெண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் பொறிக்கப் பெற்றது மூன்ரும் குலோத்துங்கனுடைய இரண்டாம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு. இவ் அரசன் கம்பன் காலத்தவன், இவனது கல்வெட்டுகளில் திருவண்ணு மலே ராஜ ராஜ வளநாட்டைச் சேர்ந்த அண்ணு நாட்டுத் திருவண்ணுமலே எனக் குறிக்கப்பட்டுள்ளது. விஜயநகரத்து ராயர்கள் காலத்தில் — அதாவது பதினைந்து பதினுரும் நூற்ருண்டுகளில் — 'அண்ணு நாட்டுத் தனியூர் திருவண்ணுமலே' எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்ன? ஒரு காலத்தில் திருவண்ணுமலேயைத் தன்னகத்தே கொண்ட பெருநிலப் பகுதி மதுராந்தக வளநாடு எனப் பெயர் பெற்றிருந்தது. பிறகு ராஜ ராஜ சோழனின் பேரும் புகழும் இந்த வளநாட்டுக்கு ராஜ ராஜ வளநாடு என்ற மாற்றுப் பெயரைச் சூட்டி வைத்தன. இறுதியில் சோழப் பேரரசின் பெருமை காரணமாக ஜெயங் கொண்ட சோழ மண்டலமாயிற்று மேலே குறித்த வள நாடு.

ஜெயங் கொண்ட சோழ மண்டலம் பெரும்பாலும் தொண்டை நாட்டையே குறிப்பாகக் கருதலாம். இம்

மண்டலத்தில் செங்குன்றக் கோட்டம் என்பது ஓர் உட்பிரிவு. இந்த உட்பிரிவைச் சார்ந்த திருவண்ணுமலே, அண்ணு நாட்டுத் தனியூராகக் குறிக்கப் பெற்றுள்ளது.

பிற்காலத்திலேதான் திருவண்ணுமலே ஒரு நடு நாட்டுத் தலமாகக் கருதப்பட்டது. நடு நாட்டுச் சிவத்தலங்கள் இருபத்திரெண்டில் ஒன்று திருவண்ணு மலே என்பர். எனவே, திருவண்ணுமலே முதலில் தொண்டை மண்டலத் திருத்தலமாக இருந்து, நாளடை வில் நடுநாட்டுத் தலமாக எண்ணப்பட்டது எனலாம். இந்த ஊகத்திற்கு இணங்க, ஜெயம் கொண்ட சோழ மண்டலம் என்ற நிலப்பகுதி தொண்டை நாட்டுடன் நடு நாட்டின் ஒரு பகுதியையும் அடக்கிக்கொண்டிருந் தது எனக் கருதுவதிலும் தவறில்லே.

திருவண்ணுமலேக் கோயில் மிகவும் பிரசித்தமான சிவக்ஷேத்திரமாக இருந்தபோதிலும், மிகவும் பழமை யான கல்வெட்டுக்களே இங்கே காண்பதற்கில்லே. கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதிக் கல்வெட்டைக் கூட நாம் இங்கே காண முடியவில்லே. தேவாரம் பாடிய மூவருள் இருவரான சம்பந்தரும் அப்பரும் இக்கோயிலே பதிகங்கள் பாடித் துதித்திருந்தும், அக்காலத்திலேயே இது மிகவும் பிரசித்தமான தலமாக இருந்தும், நாம் அக்காலத்தை ஒட்டிய பழைய கல்வெட்டுக்களேக் காணுததற்குக் காரணம் என்ன ?

அப்பர் சுவாமிகளின் சீடனுன மகேந்திர வர்ம பல்லவனின் காலத்திலேதான் கற்கோயில்கள் முதன் முதலாகக் கட்டப்பட்டன. அதற்கு முன் செங்கல், சுண்ணும்பு ஆகியவை கலந்த கட்டிடமாகத்தான் ஆலயங்களாக அமைத்திருக்க வேண்டும். அதற்கும் முன்னர் மண், மரம் முதலான அழியும் பொருள்களே ஆலயங்களே அமைக்க உதவியிருந்தன. நிலேயான பரம்

பொருளுக்கு ஒரு குறியான கோயில் கருங்கற் பணியா கத்தான் அமைய வேண்டும் என்ற எண்ணம், விசித்திர சித்தன் என்ற பட்டப்பெயரை உடைய மகேந்தர வர் மனின் கலையுள்ளத்தில் தானே முதல் முதல் உதித்தது.

மேலும் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் அண்ணுமலையாரைத் தரிசித்தார்களே, அந்த அண்ணு மலையார் இக் கோயிலில் தான் காட்சி வழங்கினரா? இல்லை! என்று திட்டமாகச் சொல்லி விடலாம். அந்த நாளில் மலைமீது செங்கல்—சுதைக் கட்டடமாக ஒரு சிறு கோயில் இருந்தது; அதுவே அண்ணுமலையார் கோயில் என்று ஊகிக்கலாம். இதற்குச் சேக்கிழார் பெருமான் அருளிய பெரிய புராணத்தில் குறிப்பும் கிடைக்கிறது. இக் கோயிலில் பல்லவர் காலத்துக் கல் வெட்டு ஒன்றும் கிடைக்கவில்லையே.

செங்கற் சுதைக் கோயில் கருங்கற் கோயிலாக மாறியது பல்லவர் காலத்துக்குப் பின்பு நிகழ்ந்த தொரு நிகழ்ச்சிதான். பல்லவர் வீழ்ச்சியை ஒட்டி வளரத் தொடங்கியது சோழப் பேரரசு என்பதை வரலாற்று மாணுக்கர் அறிவர். இப்பேரரசின் ஆரம்பகாலத்தில் இருந்தவன் விஜயாலய சோழன். இவன் வமிசத்தில் தோன்றிய முதல் மன்னர் காலத்திற்குச் சற்று முன்பு தோன்றியதுதான் இக் கோயிலின் கருங்கல் பணி என்றும், அம் முதல் மன்னர்களின் காலத்தில் இத் திருப்பணி மலையடிவாரத்தில் முற்றுப் பெற்றிருக்க வேண்டும் என்றும் ஊகிப்பதே சரியாகும். அம்மன்னர் கள் இதை இவ்வளவு பெரிய கோயிலாக—தமிழகத்தின் மிகப்பெரிய கோயில்களில் ஒன்ருக—அமைக்க வேண்டு மென்று கனவு கண்டதே அவர்களுடைய நிகரற்ற சிவபக்திச் சிறப்பிற்குச் சான்ருகும்.

# 5. வரலாற்றுப் பலகணியில் அண்ணுமலை

நமது நாட்டிலே வரலாற்றுப் பலகணி பெரும் பாலும் மூடப்பட்டே இருக்கிறது. கொஞ்ச காலமாகத் தான் இப்பலகணியைக் கண்டு பிடித்தும் செப்பனிட்டும் பழுது பார்த்தும் ஓரளவு திறந்து வைக்கப் பகீரத முயற்சிகளை ஆராய்ச்சியாளர்கள் மேற்கொண்டு வருகிறுர்கள். இப்பெரு முயற்சிகளில், சாசனங்களின் ஆராய்ச்சி, ஒரு முக்கிய இடம் பெற்றிருக்கிறது. 'வரலாற்றின் இரத்த ஓட்டம்' சாசன ஆய்வு எனக் கூறுவதும் மிகையாகாது.

திருவண்ணுமலைக் கோயிலில் மிகப் பழமையான சாசனங்களைக் காண்பதற்கில்லை என்பதை ஏற்கெனவே தெரிந்து கொண்டிருக்கிறேம். இங்கே கிடைக்கும் சாசனங்களில் மிகவும் பழமையானவை அண்ணுமலை யாரின் கர்ப்பக்கிரகத்துச் சுவர்களில்தான் காணப் படுகின்றன. முதற் பிராகாரத்துச் சுவர்களில் சிறிது பிற்காலத்துக் கல்வெட்டுக்களைக் காண்கிறேம். மிகவும் பிற்காலத்துக் கல்வெட்டுக்களைக் கிளிக் கோபுரம், வல்லாள கோபுரம், கிழக்குச் சந்நிதி பெரிய கோபுரம், மேற்குப் புறத்துப் பேய்க் கோபுரம், ஆயிரக்கால் மண்டம் முதலிய இடங்களிலே காண்கிறேம். ஆதியில் கோயில் சிறிதாக இருந்து, காலப் போக்கிலே வளர்ந்திருக்க வேண்டும்.

எந்த எந்த காலங்களில் எந்த எந்தப் பகுதிகள் இக் கோயிலில் உருவாகி இருக்க வேண்டும் என்பதை ஊகிக்கலாம். முதல் பிராகாரத்துச் சுவர்களில், பழைய சோழப் பேரரசர்களின் சாசனங்களைக் காண முடிய வில்லை. கி. பி. பத்தாம் நூற்ருண்டின் இடைப் பகுதி

வரை — அதாவது ராஜாதித்ய சோழன் காலம் வரை — கர்ப்பக் கிரகம் மட்டுமே கல்லுத் திருப்பணியாக இருந்திருக்க வேண்டும். முதற் பிராகாரம் கூடச் செங்கற் சுதை முதலிய அழியும் பொருள்களால் தான் அமைந்திருக்க வேண்டும் அந்த நாளிலே.

பதினேராம் நூற்ருண்டின் முற்பகுதியில் தான் முதற் பிரகாரத்துச் சுவர் கல்லால் கட்டப் பெற்றிருக்க வேண்டும். கங்கை கொண்ட சோழனின் பதினெட்டாவது ஆட்சி ஆண்டு கல்வெட்டை — அதாவது கி. பி. 1028ம் கல்வெட்டை — முதற் பிராகாரத்துச் சுவரில் காண்கிருேம். அதிலிருந்து, அக்காலத்துக்கு முன்பு தான் முதலாவது பிராகாரத்துக் கருங்கற்பணி முடிவுற்றது என்று ஊகஞ்செய்யலாம்.

முதல் பிராகாரத்துச் சுவர்களில் கங்கை கொண்ட சோழன் என்ற முதலாவது ராஜேந்திர சோழனின் சாசனங்களுடன், மூன்ரும் குலோத்துங்க சோழன் (கம்பன் காலத்தவன்) மூன்ரும் ராஜராஜன் (சோழப் பேரரசின் வீழ்ச்சி நிலையில் வாழ்ந்தவன்) ஆகியவர்களின் கல்வெட்டுட்களையும் காண்கிருேம். இந்தப் பிராகாரத்துச் சுவர் சோழப் பேரரசின் உன்னத காலத்தையும், அப்பேரரசின் வீழ்ச்சியையும் சுட்டிக் காட்டுகிறது.

சோழப் பேரரசர்களின் கல்வெட்டுக்களுடன், இப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின் வாழ்ந்த பல்லவனை கோப்பெருஞ் சிங்கனின் சாசனங்களும் முதலாவது பிரகாரத்துக் கட்சுவரில் காணப்படுகின்றன. இச்சுவரிலே பிற்காலக் குலசேகரப்பாண்டியன் முதலியோரின் கல் வெட்டுக்களையும் காண்கிருேம். இதனல் நாம் அறிந்து கொள்ளுவது என்ன? இப் பிரகாரத்துச் சுவர்கள் பல நூற்ருண்டுகளாக உறுதியான நன்னிலையில் இருந்தன என்பதே.

முதலாவது பிரகாரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலையும் சிதம்பரேசர் கோயிலையும் காண்கிறோம். இந்த இரண்டு கோயில்களின் சுவர்களிலும் பன்னிரெண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களைக் காணலாம். சிதம்பரேசுவரர் கோவிலில் பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதிக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இதனால் சிதம்பரேசர் கோவில் இந்தக் காலப் பகுதிக்கு முன் ஏற்பட்டிருக்க வேண்டும். இக்கோயிலுடன் கட்டப் பெற்றதுதான் ஏகாம்பரநாதர் கோவிலும் என்று ஊகிக்கிறார்கள்.

கிளிக் கோபுரத்துச் சுவர்களிலிருந்து முப்பத்திமூன்று கல்வெட்டுகள் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இவற்றுள் மிகப் பழமையானது பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடக்கத்தில் பொறிக்கப் பெற்றுள்ள வீர ராஜேந்திர சோழனுடைய சாசனம். இச்சோழனது இரண்டாவது ஆட்சி ஆண்டாகிய 1063இல் இது பொறிக்கப்பட்டது.

கோயிலின் கர்ப்பக் கிரகம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் கருங்கல்லால் கட்டப்பெற்றது என்பதை ஏற்கெனவே தெரிந்து கொண்டிருக்கிறோம். முதலாவது பிரகாரம் கருங்கல்லால் அமைந்தது 1028ஆம் ஆண்டுக்கு முன்பு. சுமார் 150 ஆண்டுகளுக்கிடையே கர்ப்பக் கிரகத்திற்குப் பாதுகாப்பாக முதல் பிரகாரம் கருங்கல்லால் அமைக்கப்பெற்றது. கிளிக் கோபுரம் முதலியன பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கற்பணிகள் ஆகியிருக்க வேண்டும்.

இந்த விதமாக இக்கோயில் ‘என் சரிதம்’ சொல்லி வருவதை ஆராய்ச்சிக் கண் கொண்டவர்கள் காணலாம், கேட்கலாம். இச் சரித்திரத்தைக் கேட்டுக் கொண்டே வரலாற்றுப் பலகணி வாயிலாகச் சில காட்சிகளையும் காண்கிறோம்.

அம்மன் கோயிலைத் தனியாகக் கட்டியிருந்தால், அதைத் திருக்காமக்கோட்டம் என்று கல்வெட்டுகளில் குறிப்பிடுவர். இங்கே அம்மன் உண்ணுமுலை அம்மன் என்ற உண்ணுமுலை நாச்சியார். இப்பெயரைத் திருஞான சம்பந்தரின் தேவாரத் திருப்பதிகத்திலும் காண்கிறோம். உண்மை என்னவென்றால், இந்த அம்மனின் பெயரை ஒரு சிறப்புப் பெயராகத் திருஞான சம்பந்தர் குறிப்பிட வில்லை. உமையம்மை உலகங்களை யெல்லாம் ஈன்றெடுத் தும் என்றும் கன்னிதான் என்ற ஒரு தனிப்பெருங் கொள்கையை வற்புறுத்தவே ஞானசம்பந்தர் 'உண்ணு முலை உமை' எனப் பொதுவாகத்தான் குறிப்பிடுகிறார். இந்த 'உண்ணுமுலை பெயர்' நாளடைவில் இந்த அம் மனின் சிறப்புப் பெயர் ஆகியிருக்க வேண்டும் என்று ஊகிப்பதே பொருத்தம்.

இந்த அம்மனைப் பற்றிய குறிப்பு ஒன்றும் கம்பன் காலத்தவனாகிய குலோதுங்கனின் இரண்டாவது ஆட்சி ஆண்டாகிய கி.பி. 1179ஆம் ஆண்டுக்கு முன்பு காணப் படவில்லை. எனவே அம்மனுக்கு ஆதியில் தனிக் கோயில் இல்லை; பன்னிரெண்டாம் நூற்றாண்டில்தான் தனிக் கோயில் தோன்றியிருக்க வேண்டும். இது கோயில் களின் வரலாற்றிலே கவனிக்கத்தக்க ஒரு முக்கியமான செய்தி.

## மதிற் சுவர்களின் பெயர் முதலியன

கோயிலின் மதில்கள் சிலவற்றுக்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதைப் பதின்மூன்றாவது நூற்றாண் டின் நடுப்பகுதியில் ஏற்பட்ட சாசனங்களின் மூலம் அறிகிறோம். திரு ஏகம்பமுடையான் திருமதில் என்பது ஒரு மதிலின் பெயர். வீராசுரன், வாணாதராயன் முதலிய வர்களின் பெயர்களாலும் மதில்களைக் குறிப்பிடுவதுண்டு.

அண்ணுமலையார் சந்நிதிக்கும் உண்ணுமுலை அம்மையின் சந்நிதிக்கும் மேற்குப் பக்கத்தில் ஒரு சிறு கோயில் இருந்தது. இது பல்லவ குடும்பத்து அரசி ஒருத்தியால் பதின்மூன்ரும் நூற்ருண்டின் பிற்பகுதியில் ஏற்பட்டது என்று தெரியவருகிறது. இக் குடும்பம், பல்லவராட்சியும் சோழராட்சியம் ஒழிந்த நிலையில், பட்ட மரம் தளிர்ப்பது போல், தளிர்த்திருந்த ஓர் அரச குடும்பமாகும். இக்கோயில் இப்போது காணப்படவில்லை. இதைக் கட்டுவதற்காக மேலே சொன்ன குடும்பத்து அரசி பதினுயிரம் பொற்காசுகளைக் கோயில் அதிகாரிகளுக்குக் கொடுக்க வேண்டியிருந்ததாம். அந்த அதிகாரிகள் பதின்மூன்றரைக் குழிநிலம் அளந்து விற்றனராம். இக்கோயில் இப்போது இல்லா விட்டாலும் இச் செய்தியைத் தெரிவிக்கிறது ஒரு கல்வெட்டு.

இரண்டாம் பிரகாரமும், மூன்ரும் பிரகாரமும் கோபுர வாசல்களும் பதினுலாம் நூற்ருண்டில் தோன்றியிருக்க வேண்டும். ஆயிரக்கால் மண்டபத்தை அமைத்தவர் விஜய நகரப் பேரரசரான கிருஷ்ண தேவராயர். இவர் ஸ்ரீ வைஷ்ணவராயினும், சமரச மனப்பான்மையுடனும், சிவன் கோயில்களிலும் பணிகள் செய்திருக்கிருர். ஆயிரக்கால் மண்டபத்திற்கு எதிரிலுள்ள குளமும், பதினெரு நிலைக் கோபுரமும் வேறு பல பணிகளும் கி. பி. பதினுரும் நூற்ருண்டின் முற்பகுதியின் தொடக்கத்திலே கிருஷ்ண தேவராயரால் செய்து முடிக்கப்பட்டன. இச்செய்திகள் ஆயிரக்கால் மண்டபத்து கல்வெட்டு ஒன்றில் கூறப்பட்டுள்ளன.

கிழக்கு வாசலில் உள்ள பதினேரு நிலைப் பெரிய கோபுரம், பதினேழாம் நூற்ருண்டின் இறுதியில் தஞ்சை நாயக்க மன்னர் ஒருவரால் கட்டி முடிக்கப்பெற்றதாகும். இக் கோபுரத் திருப்பணியைக் கிருஷ்ண தேவராயர்

காலத்திலேயே தொடங்கி இருப்பதாகத் தெரிய வருகிறது.

### கோப்பெருஞ்சிங்கனின் சிவப்பணி

பிற்காலத்துப் பல்லவ அரசனான கோப்பெருஞ் சிங்கன், ஆறிச் சாம்பலாகி விட்ட பல்லவ வீர நெருப்பு ஏழுநாவுடன் சீறி எழுவது போல், எழுந்து வீரச் செயல்களும் பக்திப் பெரும் பணிகளும் புரிந்தான் என்பது தமிழக வரலாற்றுச் செய்திகளில் ஒரு முக்கிய மான செய்தியாகும். கோப்பெருஞ்சிங்கனும் அவனு டைய மகனும் செய்த பணிகளில் சிறந்தவற்றை அழகாக எடுத்துக் காட்டுகிறது ஆசிரியப்பா ஒன்று. இந்தப் பாடல் இக்கோயிலின் முதலாவது பிரகாரத்து மேலண்டைச் சுவரில் பதிப்பிக்கப் பெற்றுள்ளதைக் காணலாம்.

இக் கல்வெட்டு 'ஸ்வதி ஸ்ரீ' என்று தொடங்குகிறது. கோப்பெருஞ்சிங்கனைப் பல்லவர் பெருமான் என்றும் சக்கரவர்த்தி என்றும் சிறப்பிக்கிறது.

இருநிலம் தன்னில்
இனிதுவாழ் கெனவே

என முற்றுப் பெறுகின்றது.

இக்கல்வெட்டுப் பாடலிலும் வேறொரு சாசனத் திலும் கோப்பெருஞ்சிங்கனின் திருப்பணிகளோடு, தான தருமங்களும் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இப்படியே சிற்றரசர்களும் அரச குடும்பத்துப் பெண், மணிகளும் பெரும் பக்தியுடன் செய்த பல தானங்களின் விவரங்களையும் கல்வெட்டுக்களில் காணலாம்.

### கோயிலின் நிர்வாகம் முதலிய செய்திகள்

கோயில் அதிகாரிகள் பல திறத்தினராய் ஸ்ரீருத்திரர் மாகேசுவரர், மாகேசுவரக் கண்காணி செய்வார்,

கோயிற் கணக்கர், ஸ்ரீ காரியம் செய்வார், முதலிய அதிகாரப் பெயர்களுடன் கோயில் நிர்வாகத்தை மேற் கொண்டிருந்தனர் என்பதையும் சாசனங்கள் அறிவிக் கின்றன. சாசனங்களில் காணும் தருமங்களை ஒழுங் காகப் பாதுகாத்து வந்தவர்களை ஸ்ரீ மாகேசுவரர் என்பர். அரசப்பிரதிநிதிகளும் கோயிற் கணக்குகளைப் பரிச்சோதித்தனர்.

கோயிலுக்குச் சேரவேண்டிய தொகையைத்தானே எடுத்துக் கொண்ட ஒரு தொண்டனிடமிருந்து அந்தத் தொகையுடன் அபராதமும் (தண்டமும்) கைப்பற்றப் பட்ட செய்தியை ஒரு கல்வெட்டிலிருந்து அறிகிறோம்.

திருக்கோயிலில் சந்தி விளக்கு, நந்தா விளக்குப் பணிகளுக்காக ஆடுமாடுகள் விடப் பெற்றிருந்தன. அவற்றின் நிலைமை அவ்வப்போது பரிசோதிக்கப் பட்டது; தகுதியற்றவர்கள் நீக்கப்பட்டார்கள். இச் செய்தி ஒரு கல்வெட்டால் அறியப்படுகிறது.

பூஜை செய்யும் பட்டர்களுக்கும், வேத அத்ய யைனம் செய்யும் வேதியர்களுக்கும், திருப்பாட்டு ஓது வார்க்கும் தானங்கள் கொடுக்கப்பட்டதாகச் சாசனங் கள் அறிவிப்பதையும் காண்கிறோம். தேவரடியாரைப் பற்றிய செய்திகளும் சாசனங்களில் காணப்படுகிறது. ஆதியில் இவர்கள் கன்னியராகவே தொண்டுகள் புரிந் திருக்க வேண்டும்; நாட்டிய மாதராகவும் வேறு வகை யினராகவும் திருவண்ணமலைக் கோயிலில் தேவரடியர் பலர் தொண்டாற்றி வந்ததாகத் தெரிய வருகிறது.

பதின்மூன்றும் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன் றிய ஒரு கல்வெட்டு, இரண்டு தெருக்களில் இருபத்தி நான்கு தேவரடியார்கள் வாழ்ந்ததாகத் தெரியவரு கிறது. இத்தேவரடியார்களுக்கு மானிய நிலங்கள்

விடப்பட்டிருந்தன. இந்த நிலங்களுக்கு எவ்விதமான வரியும் கிடையாது. இச்செய்தி ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது. இத்தேவரடியார்கள் செல்வ வாழ்க்கை வாழ்ந்திருக்க வேண்டும்; இவர்களில் பலர் கோயிலுக்குத் தானங்கள் செய்ததுண்டு. இந்த விவரங்களையும் கல்வெட்டுக்களில் காண்கிறோம்.

கோயிலின் வீதிகளைச் செம்மையான நிலையில் வைத்திருந்தார்கள். அதற்காகத் திருவீதியாண்டார்கள் என்பார்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இருபது திருவீதியாண்டார்களுக்கும் அவர்களின் தலைவர்களாக இருவர்களுக்கும் நிலம் கொடுக்கப்பட்டிருந்த செய்தியை ஒரு சாசனம் தெரிவிக்கிறது. திருநாவுக்கரசர் செய்த உழவாரத் தொண்டைத் திருவீதியாண்டார்கள் மேன்மையாகப் போற்றி வந்தனர்.

நாள் தோறும் நடைபெறும் பூஜைகளில் திருமுழுக்கு முதலியவைகளுக்கு தானம் செய்யப்பட்ட விவரங்களையும் சாசனங்களில் காண்கிறோம். அரசர்கள் தவிரப் பெருஞ் செல்வர்களும் தங்கள் பேரால் கட்டளைகள் ஏற்படுத்தியிருந்தனர்.

கோயிற் சுவர்களில் காணப்படும் சாசனங்களில், சேனை அதிபர்களுக்கும் சிற்றரசர்களுக்கும் முக்கியஸ்தர்கள் சிலர் விசுவாசப் பிரமாணம் செய்து வைத்தார்கள் என்பதைத் தெரிவிக்கும் சாசனங்களும் உண்டு. விலை விகிதம், வட்டி விகிதம் அக்காலத்தில் எப்படி இருந்தன என்பதையும் சாசனங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம். நெய் மிளகு, உப்பு, தயிர், சீரகம், வாழை இலை, வாழைப்பழம், வெற்றிலை அடைக்காய் முதலியன நெல்லை அளந்து வாங்கப்பட்டன.

## பெண்களின் தருமபுத்தி

பெண்களும் பொது அரங்குகளில் ஈடுபட்டனர் என்ற செய்தியை ஒரு சாசனம் தெரிவிக்கிறது. பஞ்சம் வந்து விட்டது ஒரு சமயம். உழக்கு அரிசிக்கு ஒரு பொற்காசு கொடுக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டு விட்டது. அப்பொழுது ஒரு பெண் அணிந்திருந்த அணிகள் அனைத்தையும் சேமித்து வைத்திருந்த நெல்லையும் பொருளையும் கொடுத்ததுடன் தான், அணிந் திருந்த நகைகள் அனைத்தையும் அளித்து ஆறு ஒன்றில் அணைகட்ட உதவி செய்தாள். ஒரு புது ஏரியை அமைக்கவும் அள்ளிக் கொடுத்து உதவினுள். அந்த ஏரியைப் பாதுகாக்க கோயிலதிகாரிகளும் கோயில் நிலத்தைக் கொடுத்து உதவினர்.

இச்செய்திகளைத் தெரிவிக்கும் ஒரு சாசனம், இந்த அறம்பெரும் பற்றுள்ள நங்கையின் பெயர் 'மங்கையர் கரசியார்' என்று குறிப்பிடுகிறது. அருமையான பொருத்தமான பெயர் இல்லையா? தேவார காலத்திலே ஞானசம்பந்தப் பெருமானுக்குச் சைவத்தை நிலைநாட்ட உதவி செய்தாளே அந்த மங்கையர்கரசியின் பெயர் பொது நலத் தொண்டில் முற்பட்டு நின்ற இப்பெண் மணிக்கும் பொருந்துவது தானே.

தெய்வத் தொண்டு மட்டுமல்ல, பொது நலத் தொண்டும் தெய்வத் தொண்டு தான் என்ற குறிப்பையும் இச்சாசனத்தில் காணக்கூடும் என்பது என் கருத்து. இதனுல் தான் மனிதனை 'நடமாடும் கோயில்' என்று சிவநேசர்கள் வருணித்திருக்கிருர்கள். மெய்கண்ட தேவரின் காலத்தைக் கி. பி. 1232இல் ஏற்பட்ட கல்வெட்டு வரையறுக்க உதவுகிறது.

# 6. வரலாற்றிலும் இலக்கியத்திலும் கார்த்திகைத் தீப விழா

கார்த்திகைத் தீப விழா ராஜேந்திர சோழன் காலத்திலும், கம்பன் காலத்தவனுன மூன்ரும் குலோத்துங்கன் காலத்திலும் கொண்டாடப்பட்டது. திருவண்ணுமலையில் இவ்விழாவுடன் பங்குனி விழாவும் தைத் திருவிழா ஒன்றும் நடைபெற்றன. இம்மூன்று விழாக்களிலும் மிகவும் சிறப்பாக—இன்று மக்கள் கொண்டாடுவது போல் கார்த்திகைத் தீப விழா அன்றும் கொண்டாடப்பட்டது. இச்செய்திகளைப் பல கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

இவ்விழாக்களைத் தரிசிக்க வரும் சிவயோகியோர் முதலானேர்க்கு உணவு முதலியன கொடுக்கப்பட்டன. அதற்காகத் தானங்கள் ஏற்பட்டிருந்தன. அத்தான விவரங்களைப் பல கல்வெட்டுகளில் காண்கிருேம். இக் கார்த்திகை நாளில் ஆடவல்லார் என்ற ஆனந்தக் கூத்தருக்கு—நடராஜருக்குச் சாத்துவதற்காகச் சாந்து சமர்ப்பிக்கவும் தானங்கள் ஏற்பட்டிருந்தன.

அக்காலத்தில் வேட்டையாடப் போனவர்கள் விலங்குகள் மீது அம்புகள் எய்வார்கள். அந்த அம்புகள் மக்களில் எவர் மேலாவது விழுந்து, அம்மக்கள் கொல்லப்படுதலும் சாத்தியமே. அத்தகைய அஜாக்கிரதையால் நிகழ்ந்த கொலைக்குக் கழுவாய் அல்லது பிராயசித்தம் என்ன தெரியுமா? கோயிலில் விளக்கேற்றி வைப்பது ஒரு முக்கியமான கழுவாயாகக் கருதப்பட்டது என்பதைச்சில கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இதிலிருந்து, கார்த்திகைத் தீபப் பெருவிழா கொண்டாடுவதற்கு இயன்ற உதவிகள் செய்வதன் அவசியத்தையும் ஊகித்து உணர்த்து கொள்ளலாம்.

திருவண்ணுமலைக் கல்வெட்டுக்களில் அரசாங்கத்தால் நாளது வரை பதிவு செய்திருக்கப் பெற்றவை; வரலாற்றுப் பலகணியைத் திறந்து பல பழைய நிகழ்ச்சிகளை நமக்குக் காட்டுகின்றன. இன்னும் பதிவு செய்யப் படாத சாசனங்கள் இக்கோயிலில் அதிகமாய் இருப்பதாகத் தெரியவருகிறது. இவையெல்லாம் இன்னும் எத்தனையோ அரிய வரலாற்றுச் செய்திகளைத் தெரிவிக்கக்கூடும்.

சாசனங்களால் அக்காலப் பழக்க வழக்கங்களும் நாகரிக நிலையும், விழாக்களின் நிலையும் இவை மக்களுக்கு வாழ்க்கையில் சுவையும் மகிழ்ச்சியும் ஊட்டி வந்த நிலையும் அறியப்படுகின்றன. அக்காலத்தில் வழங்கி வந்த தமிழ் மொழியின் நிலையும் அறியப்படுகிறது. அரசர்களின் வீரச்செயல்களுடன், மக்கள் உரிமையாக இருந்த சுதந்திர ஆட்சி முறைகளையும் கூட நாம் ஒருவாறு கல் வெட்டுக்களால் அறிந்து கொள்ளலாம்.

இத்தகைய கல் வெட்டுக்களால் நாம் அண்ணுமலைத் தீப விழாவைக் குறித்து அறிந்து கொள்ளும் செய்திகளுடன் இலகியங்களில் கிடைக்கும் குறிப்புக்களையும் பொருத்திப் பார்த்துப் பயன் பெறலாம்.

### களவழியில் கார்த்திகை தீபம்

சங்க காலம் தொட்டு நாளது வரை, சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாக நம்மவர்களால் சிறப்பாய்க் கொண்டாடப் பெற்று வரும் அரும் திருவிழாக்களில் ஒன்ருகிய அண்ணுமலைத் தீப விழா, தமிழ்ப் பெருமக்களது வாழ்க்கையில் ஓர் இன்றியமையாத பகுதியாகி இருக்கிறது. களவழி நாற்பது என்ற நூலின் ஆசிரியரான பொய்கையார் இவ்விழாவை ஒட்டி மாலை வேளையில் ஏற்றிவைக்கும் விளக்கொளியை ஒரு போர் நிகழ்ச்சிக்கு உவமையாக்குகிருர். இந்த உவமையால் அருளாளராகிய பொய்கையார் அறிவாளியும் பெரு வீரனுமாகிய

கோச்செங்கைச் சோழனைச் சிந்திக்க வைக்கிறார் தமது களவழியின் பதினேழாம் செய்யுள் வாயிலாக.

எத்தனையோ உவமைகளால் இரத்தப் பெருக்கை ஏற்கெனவே வருணித்துக் காட்டிய கவிஞர் இவர். இரத்த வெள்ளம், இரத்த ஆறு, இரத்த மழை என்றெல்லாம் வருணித்தவர். ஆனால் இங்கே இப்போது துளி துளியாக வீரர்களின் மேனியிலிருந்து விழுந்து கொண்டிருக்கும் இரத்தத்தைச் சுட்டிக் காட்டுகிறார். இந்த இரத்தத் துளிகளுக்கு, கார்த்திகை விழாவில் வரிசை வரிசையாக ஏற்றி வைக்கும் சிறு மாலை விளக்குகளை உபமான மாக்குகிறார்.

'கார்த்திகை விளக்கீடு காணாதே போதியோ?' என்று திருஞான சம்பந்தர் பூம்பாவையை விளித்துப் பாடியிருப்பது பொய்கையாரின் நினைவுக்கு வந்திருக்க வேண்டும். இவர் சோழர் பெருமானை விளித்து, அரசே! ஒண் குருதி என்ற விளக்கொளியைக் களத்தில் கண்டாயோ? காணாமல்தான் இருந்து விட்டாயோ? என்று கேட்பது போல் பாடியிருக்கிறார்.

'வீழ்தரும் ஒண்குருதி கார்த்திகைச் சாற்றில்
(விழாவில்) கழி விளக்குப் போன்றனவே!

என்பது பொய்கையார் வாக்கு. கழிவிளக்கு என்றால் மிக்க விளக்கு.

சிவநேசனான கோச்செங்கச் சோழனின் உள்ளத்தில் திருஞான சம்பந்தரின் கருத்து நன்கு பதிந்திருக்க வேண்டும். இந்த அரசன் சம்பந்தருக்கு முற்பட்டவனாக இருந்தாலும் சரி; பிற்பட்டவனாக இருந்தாலும் சரி. இந்த உவமை தூய நினைவுகளைத் தோற்றுவித்துப் போர்ச் செயல் அடாத செயல் என்பதைப் பதிய வைத்திருக்க வேண்டும் இவனது பக்தி உள்ளத்திலே.

## 7. அண்ணுமலையின் ஞான தீபங்கள்

அண்ணுமலையின் மிகவும் பிரசித்தமான ஞானதீப மாக அருணகிரியாரைக் குறிப்பிட வேண்டும். இந்தத் தீபம் ஒளிர்ந்தது கி. பி. 15-ம் நூற்ருண்டின் இடைப் பகுதியிலே. கி. பி. 1406 முதல் 1423 வரை—பதினுறு ஆண்டுகளாக முதல் பிரபுட தேவராயன் ஆட்சி செலுத்திவந்தான். இவனுடைய பேரன் இரண்டாம் பிரபுட தேவராயன். இவன் 1447 வரை—அதாவது 25 ஆண்டுகளாக ஆட்சி செலுத்தினுன். 1465 வரை—அதாவது 18 ஆண்டுகளாக ஆட்சி செலுத்திய மல்லிகார்சுன ராயனையும் பிரபுடதேவன் என்று குறிப் பிடுவது உண்டு. இம்மூன்று அரசர்களும் விஜயநகர மாவேந்தர்கள். இவர்களில் இரண்டாம் பிரபுடதேவ ராயரின் காலத்தவர் அருணகிரிநாதர் என்பது வரலாற் றுப் பேரறிஞர் சதாசிவப் பண்டாரத்தாரின் கருத்து.

அருணகிரிநாதர், குகை நமச்சிவாயர், குரு நமச் சிவாயர் ஆகிய மூவரும் திருவண்ணுமலையின் பேர் பெற்ற மூன்று ஞானதீபங்கள் ஆவர்.

### மனக்குகையில் ரமண மாமுனி

அண்மையில் வாழ்ந்த ஸ்ரீரமண மகரிஷியைத் திருவண்ணுமலையின் ஞான ஒளி விளக்காக உலகம் அறிந்திருக்கிறது. பகவான் ஸ்ரீரமணர் பல ஆண்டு களாக வெளிநாட்டினராலும், டாக்டர் P. V. செரியன் போன்ற கிருஸ்தவ அறிஞர்களாலும் பாராட்டப் பெற்றி ருக்கிருர்.

ரமண மகரிஷியின் 85ஆம் பிறந்த நாள் விழாவை ஒட்டி அப்பொழுது மகாராஷ்டிர கவர்னராக இருந்த டாக்டர் P. V. செரியன் சிந்தனைச் சுடர்களைத் தூண்டக்கூடிய சில கருத்துக்களை ஒரு பத்திரிகையில் வெளியிட்டிருந்தார். அதில், சாதுக்கள், அனுபூதிமான்கள் ஆகியவர்களின் நீண்ட பரம்பரை ஒன்று நமது நாட்டில் ஒரு தொடர் சங்கிலியாக வந்திருப்பதாகவும், அதில் ரமண மகரிஷி ஒரு பொன் மயமான இணைப்பாகத் திகழ்வதாகவும் கூறியிருந்தார். தள்ளாடி வழுக்கிவிழும் மக்களுக்குச் சொல்லாலும் செயலாலும் ஒளி காட்டி-நெறி காட்டிய பெரியோருள் ரமணரைச் சிறந்த ஒருவராகச் சுட்டிக் காட்டியிருந்தார்.

'ரமண முனிவரை நான் நேரில் காணும் பேறு பெற்றவன். என்னுடைய நண்பர் ஒருவருடன் இரண்டு தடவை சென்று அம்முனிவரின் வாக்கை அல்ல, அந்த மௌனத்தைப் பருகி இன்புற்றேன். இவர் தென்னாட்டவரே ஆயினும் எந்நாட்டவருக்கும் உரிய தெய்விக புருஷருள் ஒருவர் என்பதைச் சந்தேக மனப்பான்மையும் ஓரளவு நாத்திகச் சார்பும் உள்ள நானும் எளிதில் உணர்ந்து கொள்ளலானேன்.'

'ரமணரின் வாழ்க்கைப் பணி குறித்துச் சிந்தனை செய்வோர், அப்பணி எவ்வாறு ஒரு மகத்தான லட்சியத்திற்கு உரிய பணியாக அரும்பி மலர்ந்து கனிந்திருக்க வேண்டும் என்பதை உய்த்துணரக் கூடும். அவர்கள் ஒரு வாழ்க்கையில் செயலும் தியானமும், எப்படி இணைந்து இசைந்து இழைந்து போகக்கூடும் என்பதையும் சிந்தித்துத் தெளிவுபெறக் கூடும்.'

'சப்த மயமான இவ்வுலக வாழ்க்கையில், பொருள் போகம், வேகம் என்ற மூன்று புதுமைச் சக்திகள் மும்மூர்த்திகளாக ஆதிக்கம் செலுத்தும் இந்த நவ

நாகரிக யுகத்திலே, ஒரு மனிதன் இவ்வாழ்க்கையை வாழ்ந்து கொண்டே மனக்குகையில் ஒடுங்கி ஒய்வு பெறுவதும் சாத்தியமே என்பதை ரமணரின் உபதேசமும் ஒழுக்கமும் ஒருங்கே உணர்த்தின.'

'ரமணரிஷி தியானத்திற்காகக் கருமத்தைத் துறக்க வேண்டும் என்ற கொள்கையை உடையவரல்லர். ஒவ்வொரு நாளும் ஒரு மணிநேரம் அல்லது இரண்டு மணிநேரம் ஒருவன் தியானத்தில் மூழ்கியிருந்து, பிறகு கடமையிலும் செயலிலும் ஈடுபடுவது நலம் என்பது ரமணரின் ஒரு கருத்து. நீராடி, உடல் நிர்மலம் ஆவது போல், தியானத்தில் மூழ்கி எழுந்து உள்ளம் நிர்மலமாகும் என்பதை இன்றைய உலகத்திற்குத் தெளிவு படுத்திய ஒருவர் ரமணர் என்பதை ரமணரின் ஆசிரமத்திற்குச் சென்றிருந்த பலரும் தெரிந்து கொண்டனர்.'

மேலே சொன்னபடி தியானம் செய்யப் பழகிக் கொண்டால், எத்தகைய உழைப்பிலும் உள்ளம் அமைதி பெறக்கூடும் என்பதை ரமணரின் சீடர்களில் சிலராவது தெளிவாகத் தெரிந்து கொண்டனர். தியானத்தின் சக்தி உழைப்பிற்கு ஒரு புதிய மெருகு மட்டுமல்ல, ஒரு புதிய பொருளையும் பயனையும் தரக்கூடும் என்பதையும் ரமணரின் சீடர்கள் உணரத் தொடங்கினர் எனலாம்.

எந்த பிரசினைக்கும் விடையை நாம் நமக்குள்ளேயே கண்டு கொள்ளலாம் என்றார் ரமணர்.

நான்எனும் ஆணவம் தள்ளலும்—இந்த
ஞாலத்தைத் தான்எனக் கொள்ளலும்

என்று அரசியல் ஞானியான பாரதி சொல்லுகிறாரே, அதை ரமண மகரிஷி தம் வாழ்க்கையில் மெய்ப்பித்துக் காட்டிய வண்ணமாக இருந்தார்.

'அறியாமையையும் மாய மயக்கத்தையும் உதறித் தள்ளுங்கள்; ஆன்ம நேய ஒருமைப் பாட்டு நெறியில் செல்லுங்கள்' என்பது ரமணர் பெரும்பாலும் பேசாத பேச்சாகச் செய்துவந்த உபதேசசாரம். அண்ணுமலைத் தீபம் போல் இந்த உபதேசம் எத்தனையோ சமயச் சச்சரவுகள் இருட்டடிப்புச் செய்திருக்கும் தத்துவ உலகிலே ஒளி வீசுகிறது; இது நம் பரம்பரைச் சொத்து என்பதை ரமணரைச் சந்தித்த இந்தியரும் பிறரும் ஓரளவு புரிந்து கொண்டனர் என்பதில் ஐயமில்லை.

அண்ணுமலை என்ற அருணுசலத்தைத் தமது தங்குமிடமாக்கிக் கொண்ட ரமணர் இந்தப் பண்டைப் பழைய மலைப் பாறைபோல் தம் வாழ்க்கையையும் கம்பீரமாகவும் முழுமையாகவும் அமைத்துக் கொண்டார்.

## இருள் அகற்றும் ஈசான்ய மடம்

ரமண முனிவருக்கும் ஈசான்ய மடத்திற்கும் உள்ள தொடர்பு குறித்து, ஒரு சமயம் இன்றைய ஈசான்ய மடத்துத் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கும் தவத் திரு இராமநாத அடிகள் செவி வழிச் செய்தி ஒன்றை என்னிடம் குறிப்பிட்டார். கடுத்தவம் கிடந்த ரமணர், தம் கடும்பசிக்கு உணவு கிடைத்தால் மிதமாக உண்டு உடம்பைப் பாதுகாத்துக் கொண்டார் என்பது சாதாரண இயற்கை நிகழ்ச்சிதான். அப்படிப் பட்ட ஒரு சந்தர்ப்பத்தில் ஈசான்ய மடத்திற்கும் வந்து அங்கே கிடைத்த பிரசாதத்தை உண்டு களைப்பாறினுராம்.

இம்மடத்துடன் ரமணர் கொண்ட தொடர்பு குறித்து வேருெரு செவிவழிச் செய்தியையும் ஸ்ரீராம

நாத அடிகள் வெளியிட்டதாக ஆனந்த விகடனில் 'அருணுசல மகிமை' என்ற தலைப்பில் வந்த தொடர் கட்டுரை ஒன்றில் 'பரணீதரன்' குறிப்பிட்டிருக்கிருர். மடத்திலே பகவத்கீதை பற்றிய ஆராய்ச்சி வகுப்பு ஒன்று நடந்து கொண்டிருந்த சமயம். அப்பொழுது அங்கு எழுந்தருளிய ரமண பகவான், 'இராமநாத சுவாமிகளுக்கு முன்பு தலைவராக இருந்த தவத்திரு நடேச சுவாமிகளின் வேண்டுகோளுக்கு இணங்க, இரண்டு மூன்று கீதை சுலோகங்களுக்குப் புதுமையான பொருள் கூறி கேட்போரை வியப்பில் ஆழ்த்திருைராம்.

'இருளே உலகத்து இயற்கை' என்று தொடங்கும் பிரசித்தமான ஒரு பாட்டைத் தமிழறிஞர்கள் நினைவு படுத்திக் கொள்ளலாம். அப்பாட்டிலே, 'இருள் அகற்றும் கைவிளக்'காகக் கற்ற அறிவுடைமை'யைச் சுட்டிக் காட்டுகிருர் ஆசிரியர். ஈசான்ய மடம் போன்ற மடால யங்களில் தலைவர்களும் பிறரும் ஞானக் கை விளக்கு களாகத் திகழ்ந்து, இருளூடே மருண்டு திரிந்து அல்லற் படுவோருக்கு நெறி காட்டியதுண்டு.

ஞானக் கைவிளக்குகள் சில, ஈசான்ய மடத்தில் தோன்றுவதற்கு மூல காரணர் கந்தப்ப தேசிகர் என்ற ஞான தீபம்தான். இத்தேசிகர் பிள்ளைப் பிராயத்தி லேயே 'குழந்தை மனிதனின் தந்தை! என்ற புதை பொருளோடு கூடிய ஆங்கில வாக்கிற்கு ஓர் இலக்கிய மாகத் திகழ்ந்தாராம். ஆழ்ந்து அகன்ற நுண்ணறிவு அப்பொழுதே மிளிரத் தொடங்கி விட்டது.

'குழந்தைக் குருநாதன்' என்று டாக்டர் மாண்டி சோரி கூறுகிருரே, அத்தகையதொரு சிறப்புக் குரு நாதனுக இருந்தாராம் கந்தப்ப தேசிகர். சாதாரண அறிவு வளர்ச்சியில் மட்டுமல்ல, தவயோகப் பற்றிலும்,

ஓர் இயற்கை மேதையாகத் திகழ்ந்தார். இக்குழந்தைக் குருநாதர் என்பர்.

அதிசயச் சிறுவரின் உள்ளம் சிவயோகத்திலும் சிவ ஞானத்திலும் சிவ பூஜையிலும் ஈடுபடலாயிற்று.

விவகார வேளையெல்லாம்
சமதி

என்ற தீவிர வேதாந்த மனபான்மையும் கந்தப்பருக்கு வாய்த்திருந்தது.

'24 மணி நேரமும் வாழ்வதெப்படி? என்பது குறித்து ஓர் அருமையான சிறு நூல் ஒன்றை நான் ஒரு சமயம் வாசிக்க நேர்ந்தது. கந்தப்ப தேசிகரோ அல்லும் பகலும் அனவரதமும் ஞான வாழ்வு வாழத் தொடங்கி விட்டாராம். தமது அன்னையாரின் அனுமதி பெற்றுக் கந்தப்பர் தீர்த்த யாத்திரை செய்து தம் அறிவையும் அனுபவங்களையும் பெருக்கிக் கொண்டு, பாச பந்தங்களைக் கடந்து சென்ற ஞானப்பெரு நெறியிலே மேலே மேலே சென்று கொண்டிருந்தார் எனத் தெரிய வருகிறது.

நடராஜப் பெருமானின் அருளால், இவர் குரு தரிசனம் பெற்றுர். ஒரு சித்த புருஷரான ஸ்ரீ மௌன சுவாமிகளை அடைந்து தம்மை முழுக்க முழுக்க அவர் பணிக்கு அர்ப்பணம் செய்தார். தம் குருவிடம் விடை பெற்றுக் கொண்டு, முடிவில் மௌன தவம் இயற்றுவதற்கு இசைந்த இடமாக திருவண்ணுமலையைத் தேர்ந்தெடுத்தார்.

இவர் திருவண்ணுமலையைத் தேர்ந்தெடுத்தார் என்று கூறுவதைக் காட்டிலும், திருவண்ணுமலையே இவரைப் போன்ற ஞானிகளைத் தேர்ந்தெடுத்து 'வாருங்

கள் வாருங்கள்' என்று வரவழைத்துக் கொண்டது எனக் கருதலாம்.

கந்தப்ப தேசிகர் மலைக்குகை ஒன்றில் தவம் கிடந்து மனக் குகையில் ஒடுங்கி வாழும் இரகசியத்தைத் தெரிந்து கொண்டராம். இவருக்குப் பணி செய்தவர் கள் பலவகைப் பேறுகள் பெற்றதாக இவரது வாழ்க்கை வரலாற்றுச் செய்திகள் கிடைத்திருக்கின்றன. அப் பேறுகளைப் பெறலாம் என்ற பேராசையால் இவருக்குத் தொந்தரவு கொடுத்த லௌகிகர்களைக் கண்டு அஞ்சியது தேசிகரின் ஞான உள்ளம். இந்த நிலையில் ஸ்ரீதேசிகர் திருவண்ணாமலைக்கு தென்மேற்கிலுள்ள ஒரு குளக்கரையில், நிஷ்டை கூறியிருந்தார். அங்கே மாடு மேய்ப்பவர்களின் பராமரிப்பைப் பெருஞ் செல்வர் களின் உபசாரங்களைக் காட்டிலும் உவந்து ஏற்றுக் கொண்டார்.

ஞான தேசிகர் சமாதி நிலையில் இருக்கும்போது ஒரு புலி வந்து பாதுகாப்பாக இருந்ததென்றும், புலியை இவர் அண்ணாமலையாரே! என்று அன்புடன் அழைப் பார் என்றும் சொல்லுகிறார்கள். புலிக்கு அஞ்சாத ஞான இதயம் லௌகிகப் புலிகளுக்கு அஞ்சிச் சமாதி யில் ஆழ்ந்திருந்தது! இதைக் காட்டிலும் என்ன அதி சயம் இருக்க முடியும்?

ரமண ரிஷியின் ஞானம் வெள்ளையரையும் வசீக ரித்தது என்பதை நாம் அறிவோம். அப்படியே அக் காலத்துக் கலெக்டராக இருந்த ஒரு வெள்ளைத் துரை யையும் கவர்ந்தன ஈசான்ய ஞான தேசிகரின் ஞானமும் அருளும்.

இந்த ஞான பரம்பரையில் வந்திருக்கும் ஸ்ரீ இராம நாத அடிகளின் சீரிய நன்முயற்சியால் இப்பொழுது

நடைபெற்று வரும் சேவாஸ்ரமத்தின் சமூகப் பணி களைக் காலத்திற்கு ஏற்ற நல்லறப் பணிகளாக நாம் வரவேற்கிறோம். இந்த ஆசிரமம், அநாதைப் பிள்ளை களுக்கு ஓர் இல்லம் அமைத்துள்ளது. இங்கே உலகிய' லுடன், தெய்வ நெறியும் இணைந்து அறிவுடன் அறப் பற்றும் வளர்ந்து வருகிறது. இது அண்ணாமலையாருக்கு மிகவும் உகப்பான அருமைப் பணிகளில் ஒன்றாக அறிஞர்கள் மதிப்பர்.

திருவண்ணாமலையின் ஞான தீபங்களில், வேறு சிலரையும் குறிப்பிடலாம். சேஷாத்திரி சுவாமிகள், விடோபா அடிகள், சாது துரைசாமி முதலான பெயர் கள் திருவண்ணாமலையின் அருமை பெருமைகளைக் குறிப்பிடும் போது, பலர் நினைவிற்கும் வரக்கூடும். ஞானியை 'வா வா' என்று அழைக்கும் மலை அண்ணா மலை என்று கூறுவது பொருத்தமே. தமிழகத்தின் ஞான வாழ்வுப் பண்ணைகளில் ஒன்று திருவண்ணாமலை என்பதை நாம் மறக்க முடியாது.

சங்க காலத்திற்குப் பின் நம் மக்களை ஆட்க் கொண்டு, பண்டைத் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஒரு பேர ரணாக அமைந்த கோயில் நாகரிகத்தின் தனிப் பெருஞ் சிறப்பைப் புலப்படுத்தும் ஒரு தீபஸ்தம்பமாகத் திகழ் கிறது திருவண்ணாமலை.



# பின்னுரை

கடல் மட்டத்திற்கு மேல் 2668 அடி மலை உச்சியின் உயரம்; ஆனால் இதுவன்று மலையின் உயர்வு, அடி முடி தேடிக் காணாத மலை அல்லவா ?

சுமார் 25 ஏக்கர் பரப்பு மட்டும் அன்று கோயிலின் பெருமை. அடிமுடி தேடிய அந்தத் திருமாலும் பிரமனும் கட்டிய கோயில் இது என்பது பல தமிழர்களின் நம்பிக்கை. கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் தேவாரம் பாடியவர்கள் காலத்தில் இக்கோயில் இல்லை என்ற வரலாற்றுச் செய்தி குறித்துப் பக்தி கவலைப்படுவதில்லை.

காலம் கண்ட தலம் அண்ணாமலை என்பதில் ஐயமில்லை. எத்தனை ஆட்சிகளைக் கண்டிருக்கிறது இத்தலம்! தமிழ் மன்னர்கள் மட்டுமா ? — ஹொய்சாள அரச வமிசத்தின ருக்கும் திருவண்ணாமலை தலைநகராக இருந்தது. விஜயநகரப் பேரரசர்களுக்கும் தஞ்சை நாயக்கர்களுக்குப, எவ்வளவோ ஆறுதலை அளித்திருக்கிறது? எத்தனையோ படையெடுப் புக்களையும் குழப்பங்களையும் கண்டிருக்கிறது; வெற்றி தோல்விகளைப் பார்த்திருக்கிறது. முடியரசுகள் முடிந்து போக இன்று குடியரசை கண்டிருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக அமைதியளிக்கிறது; தமிழன் உள்ளத்திற்குப் பேராசையை மட்டுபடுத்துகிறது; போராசையைப் பரிகசிக் கிறது.

திருவண்ணாமலைத் தீபம், இத்தலத்தின் மாட்சிக்கு இன்றி யமையாத நினைவுக் குறி—இத்தலத்திற்கும் மலைக்கும் கோயிலுக்கும் உயர்நிலை.

அண்ணாமலையைத் தொழுவோர்களின் தீவினைகள் அற்றுப்போகும் என்பது பக்தர்களும் அனுபூதிமான்களும் கண்ட உண்மை. இது விஞ்ஞான உண்மை அன்று; எனி னும் உண்மை உண்மைதானே.

'ஆடிப்பாடி அண்ணாமலை கைதொழ ஓடிப்போம்' நம் வினைகள் எல்லாம் என்று நம்புவோர் இன்றும் நலம் காண்கிறார்கள்.

மலை விளக்காகிய பெருஞ்சோதி மன விளக்காகி வாசகர்களுக்கெல்லாம் ஒரு நல்ல வழி காட்ட வேண்டும்.